உ

பரமபதி துணை.

# யாகோபு வைத்திய

# வாதசூஸ்திரம் 400.

மதுரை வித்துவான்,

த. குப்புசாமி நாயுடு அவர்கள்

பரிசோதித்த பிரதிக்கிணங்க

மதுரை, புதுமண்டபம் புத்தகசாலை,

இ. ராம.

## குருசாமிக்கோனர்சன்

அவர்களாற்றமது

மதுரை, வடக்குமாசிவீதி, குருசாமிக்கோனர்சந்து,

ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

 1955 [விலை ரூ. 1—8—0

நான்காம் பதிப்பு. காப்பி 750.



உ

கடவுள் துணை.

# யாகோபு அருளிச்செய்த
## வைத்திய
# வாதசூஸ்திரம்-400.

### காப்பு.

சீர்பெறவே நபிமார்கள் பாதந்தன்னைச்
    தெரிசித்து வாதசூஸ்திரத்தைச்சொல்ல
பார்புகழு மிரசூலின் பாதம்போற்றிப்
    பத்தியுட னென்தாயார் பாதம்போற்றி
நேர்பெறவே குருமுனிவர் பாதம்போற்றி
    நிறைந்தநந்தி போகரிஷி பாதம்போற்றி
எர்பெறவே கொங்கணர்தன் பாதம்போற்றி
    இனிமையுள்ள பூகிமுனி பாதங்காப்பே.

காப்பான கணேசனுட பாதங்காப்பு
    கருணைதருஞ் சிற்பரையாள் பாதங்காப்பு
தாப்பான குண்டலிசத் தியுமேகாப்பு
    தாயான மனோன்மணியாள் பாதங்காப்பு
கோப்பான பரவெளியிற் சார்ந்துநின்று
    குறிப்பறிந்த கடவுளர்தன் பாதங்காப்பு
மாப்பான நபிமார்கள் பாதங்காப்பு
    மகிழ்வாகு மருட்சோதி பாதங்காப்பே.

### நூல்.

சோதியெனுங் குருசூஸ்திரந் தன்னைத்தானுஞ்
    சொல்லுகிறே னுலகோர்க்கு வெளியதாக
நீதியுடன் நீத்தினதைச் சொல்லிவிட்டேன்
    நேர்மையுட னிதைத்தெரிந்து செய்வானாகில்
வாதிகளு மிவனாவான் வைத்தியனாவான்
    மற்றோர்க்கு யிம்முறையோ வருத்தமில்லை
சேதியாம் நீத்தினத்தின் குருவைக்கேளு
    செம்புதொட்டிப் பாஷாணம் அரிதாரந்தானே. (1)

நீத்தினத்தின் குரு.

அரிதாரம் லிங்கமுடன் ரசமுஞ்சேரு
ஐந்தாச்சு இன்னமிதை அரையக்கேளு
பெரிதான கல்லுப்புச் சத்திசாரம்
பேரான வெடியுப்பு வெண்காரந்தான்
விரிவான சூடனெடு ஐந்துமாச்சு
விதமாகக் குருவண்டு உரமும்நாவி
சரியான நெரிவிஷமும் புழுகுங்கூட்டி
தானாக யிதுவெல்லா மரைத்திடீரே. (2)

அரைப்பதற்குத் தெளிவுநீர் சொல்லக்கேளு
அவுரியொடு வாழையுடன் அரசுதேங்கு
நிரைக்கவே நாயுருவி ஐந்துஞ்சுட்டு
நேராகப் பாண்டத்தி லிட்டுக்கொண்டு
நுரைக்கவே அமுரிதனை வார்த்துக்கிண்டு
நுட்பமதாய் மூன்றுநாள் தெளியவைத்து
பரைக்கவே தெளிவிருத்துக் கொண்டுநீயும்
பாங்காக மருந்ததனை அரைத்திடாயே. (3)

அயபற்பம்.

அரைத்ததனைக் காயவைத்துப் பதனம்பண்ணு
அப்பனே விபாமினிச் சொல்லக்கேளு
நிரைத்ததொரு யிரும்பதனைத் தகடாய்த்தட்டி
நெற்கனமாய்த் தகடடித்து வைத்துக்கொண்டு
கரைத்ததொரு மருந்ததனைப் பலத்துக்கப்பா
களஞ்சிவீ தம்பூசிக் காயவைத்து
வரைத்திட்ட பூநீரு கற்சுண்ணந்தான்
வாகாகச் சரிகூட்டிப் பொடித்திடாயே. (4)

காந்த பற்பம்.

பொடியதனைக் கீழ்மேலும் ஒட்டிவிட்டுப்
போதவே மண்சீலை செய்துகொண்டு
வடிவெனவே கெசபுடத்தில் நீறிப்போகும்
மைந்தனே பாண்டுவென்ற வியாதிதீரும்
நெடியதொரு காந்தத்தைக் கொண்டுவந்து
நேராகப் பாக்குப்போ லுடைத்துக்கொண்டு
துடியான மருந்துதனைப் பூசிக்காய்ந்து
சொல்லுகிறேன் சுண்ணத்திற் புடமேபோடே. (5)

அப்பிரேகப் பற்பம்.

போடுமே காந்தமது நீறிப்போச்சு
போக்கான காந்தபற்பம் வாய்வுக்காகும்
ஓடுமே பணவிடைதான் தாக்கும்போது
உள்ளிருந்த நோயெல்லாந் தீர்ந்துபோகும்
தேடுமே அப்பிரகங் கொண்டுவந்து
சிறக்கவே வில்லைபோல் நருக்கிக்கொண்டு
நாடுமே மருந்துதனைப் பூசிக்காய்ந்தால்
நலமான சுண்ணத்தில் வைத்திடாயே. (6)

வைத்திடவே மேல்மூடிச் சீலைசெய்து
வாகான கெசபுடத்தில் வளமாய்ப்போடு
நைத்துமே நீறிவிடும் புடந்தானொன்றில்
நலமான சுண்ணமுந்தான் தளுக்கிராது
கைத்திடவே ஒருபுடத்தில் அப்பிரேகந்தான்
கடினமடா நீறுமது கண்டுபாரு
பொய்த்திடவே சொல்லவில்லை குருவின்நேர்மை
புகலரிது புகலரிது புதுமைதானே. (7)

தாம்பிரப் பற்பம்.

புதுமையுள்ள அப்ரேகப் பற்பமப்பா
போக்குமே சயகாசு மீளையெல்லாம்
கதுமையாய் நரம்பிலுள்ள வியாதியெல்லாம்
களன்றுவிடும் வைத்தியமிது கண்டுபாரு
புதுமையாய்த் தாம்பிரத்தைத் தகடாய்த்தட்டிப்
புகழான மருந்ததனைப் பூசிக்கொண்டு
மதுமையாம் செவ்வாளிப் பட்டைத்தூளில்
வைத்துமே புடம்போட நீறும்பாரே. (8)

தங்கப் பற்பம்.

பாருமே கரப்பனொடு மேகமெல்லாம்
பார்க்குமுன்னே மண்டலத்தில் தீர்ந்துபோகும்
நீருமே குன்மமென்ற தனைத்துந்தீரும்
நினைவாகச் சூலைமுத லெல்லாந்தீரும்
தேருமே இன்னமொரு சேதிகேளு
செப்புகிறேன் தங்கத்தைத் தகடாய்த்தட்டி
பேருபெற மருந்ததனைப் பூசிக்கொண்டு
பெலமாகப் பனிதாங்கி மூலிகொண்டே. (9)

வெள்ளிப் பற்பம்.

மூலிகையாற் பொதிந்துமே மண்சீலைசெய்து
முக்கியமாய்ப் புடமிடவே நீறிப்போகும்
வாலிபமாந் தங்கபற்பந் தாதுவிர்த்தி
மகராச ராசர்களுக் காகும்பாரு
கோலமாய் வெள்ளியுட பற்பஞ்சொல்வேன்
குணமாகத் தகட்டுக்கு மருந்துபூசி
சோலியே யில்லாம லரசம்பட்டைத்
தூளிலே வைத்ததனைக் கொண்டுமூடே. (10)

கொண்டுமே புடம்போடப் பற்பமாகும்
குணமாகக் கொண்டிடவே நரைகளெல்லாம்
வண்டுபோ லாகுமது கூந்தல்தானும்
வர்ணமோ தேகமன் மதனுமாவான்
கண்டுப்பா ரிதுவுமே வைத்தியமப்பா
கனப்பொழுதிற் சிலேற்பனத்தைக் கரைத்தேபோடு[ம்
விண்டுமே செத்தாலும் பேசிச்சாவான்
மேதினியிற் செய்துபார் விபரம்பாரே. (11)

வெள்ளீயப் பற்பம்.

விபரமாய் வெள்ளீயப் பற்பங்கேளு
விதமான ஈயத்தைத் தகடாய்த்தட்டி
கவசமாய் மருந்துதனைக் கொண்டுபூசிக்
கனமான ஆவரையின் பட்டைத்தூளில்
அவசரமாய் வைத்ததனை மூடிக்கொண்டு
அப்பனே மண்சீலை செய்துபின்னும்
பவசமாய்ப் புடம்போட நீறிப்போகும்
பாங்கான வெள்ளீயப் பற்பமாச்சே. (12)

பற்பமடா பணவிடைதான் மேகத்துக்குப்
பாங்கான அனுப்பான மறிந்துபோடு
அற்பமாய்ப் போகாது பற்பந்தானும்
அகலுமே மேகமென்ற வாய்வுக்கெல்லாம்
நிற்பமாய்ச் செய்யுமடா ரோகமெல்லாம்
நெடுநாளைக் குள்ளான ரோகமெல்லாம்
துப்பரவாய் ஊரலெல்லாம் விட்டுவாங்கும்
துகளான வைத்தியத்தைச் சூட்டிப்பாரே. (13)

காரீயப் பற்பம்.

சூட்டிப்பார் காரீயப் பற்பந்தன்னைக்
சொல்லுகிறேன் தகடாகத் தட்டிக்கொண்டு
வாட்டியே மருந்துதனைப் பூசிக்கொண்டு
வளமாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆட்டியே தொச்சியிலைத் தூளில்வைத்து
அப்பனே மண்சீலை செய்துகொண்டு
காட்டியே முழப்புடத்தில் நீறிப்போகும்
கண்டுபாரிதினுண்மை அருமைதானே, (14)

அருமையாங் காரீயப் பற்பந்தானும்
அனைத்துமே தசையிலுள்ள நோய்களெல்லாம்
பெருமையாய்ப் பிளவைமுதல் விப்புருதியப்பா
பெலமான அரையாப்பு யெல்லாந்தீரும்
உருமையாய்க் கொண்டிடவே மண்டலத்தில்
உள்ளநோ யெல்லாந்தா ஞெழிந்துபோகும்
தருமமாம் வைத்தியத்துக் கிதுதானப்பா
சரியாக இவ்வண்ணஞ் செய்துபாரே. (15)

நாக பற்பம்.

வண்ணமென்று நாகபற்பஞ் சொல்லக்கேளு
மகத்தான நாகத்தை உருக்கிச்சாய்த்து
திண்ணமுள்ள தகடாக்கி மருந்தைப்பூசிச்
செப்புகிறேன் பருத்திவிதைத் தூளுக்குள்ளே
கண்ணவே வைத்ததனை மேலேமூடிக்
கவுசித்து முழப்புடந்தான் கண்டுபோடு
நண்ணவே நாகமது பற்பமாகும்
நாடாது சிலேட்டுமநோய் நகண்டுபோமே. (16)

இலிங்கப் பற்பம்.

நகண்டுபோம் லிங்கபற்பஞ் சொல்லக்கேளு
நன்றாகப் பலமொன்று கட்டிவாங்கி
அகண்டிடா மருந்துதனைப் பூசிக்கொண்டு
அப்பனே அவுரியிலை அரைத்துக்கட்டி
பகண்டிடவே கவசித்து மண்சீலைசெய்து
பார்மகனே காயவைத்துப் புடந்தான்போடு
செகம்புகழ லிங்கமது பற்பமாகும்
செப்புகிறேன் சன்னிபதின் மூன்றுந்தானே. (17)

பதின்மூன்று சன்னியுந்தான் தீர்ந்துபோகும்
பார்மகனே வலியெல்லாந் தீர்ந்துபோகும்
விதிமூண்டு தென்றாலும் துயர்ந்தேதீரும்
மேலான பிரமைமுதல் வெப்புத்தீரும்
நதிமூன்றில் முழுகினது போலேயப்பா
நலமான உஷ்ணங்கள் தீர்ந்துபோகும்
சதியாக வெளியிட்டேன் சொன்னேன்பாரு
சங்கடங்கள் தீர்ந்துவிடுஞ் சாந்தமாமே, (18)

தாளக பற்பம்

சாந்தமாய்த் தாளகத்தின் பற்பங்கேளு
தயவான தாளகத்தைச் சுத்திசெய்து
வாந்தமாய் மருந்ததனைப் பூசிக்கொண்டு
மைந்தனே சொல்கிறேன் சுண்ணத்தூளில்
தேர்ந்துமே வைத்தெரிக்க மூன்றுசாமம்
திறமான பற்பமாஞ் செப்புவேன்கேள்
பாந்தாய்க் குளிர்சுரங்கள் வெப்பிளைப்பு
பகரவே யிதுவெல்லாம் விட்டுப்போமே. (19)

கெந்தி பற்பம்.

போமென்ற கெந்தியுட பற்பங்கேளு
புகழாக உருக்கியதைப் பாலிற்சாய்ப்பாய்
வாமென்று சாய்த்திடவே வட்டுப்போலே
மைந்தனே மருந்துதனை மேலேபூசி
நாமென்ற பல்லிப்பூ டரைத்துக்கொண்டு
நலமாக மேற்கவசம் நன்றாய்ச்செய்து
தாமென்ற சுண்ணத்துக் குள்ளேவைத்துத்
தப்பாமற் புடம்போடப் பற்பமாமே. (20)

பற்பத்தை அனுப்பானந் தன்னிற்சேர்த்து
பத்தியமாய்க் கொண்டிடவே குஷ்டரோகம்
அற்பமாய்ப் பறந்துவிடும் பாலுஞ்சோறும்
அப்பனே உண்டுவர மண்டலந்தான்
கற்பமென்ன யிதுபோலே கற்பமுண்டோ
காயத்தி லிருந்ததொரு களங்கமெல்லாம்
சொற்பமாய்ப் போய்விடுங்காண் வைத்தியர்க்குச்
சுகமான மருந்துதனைச் சூட்டினேனே. (21)

பாஷாணப் பற்பம்.

சூட்டினேன் வெள்ளைப்பா ஷாணந்தன்னைச்
சுண்ணத்தில் வைத்ததனைக் கள்ளைவார்த்து
ஆட்டியே கொதியிடுவாய் மூன்றுசாமம்
அப்பனே வெண்மையடா அறிந்துபாரு
நாட்டியே மருந்ததனைக் கவசஞ்செய்வாய்
நன்றுரசப் பத்துக்கு ஒன்றுவீதம்
கூட்டியே மண்சீலை செய்துகொண்டு
கோழியென்ற புடமிடவே நீறும்பாரே. (22)

நீறியதோர் பாசாணந் தன்னிலப்பா
நிமிஷத்திற் சுரந்தீரும் பத்தியம்வேண்டாம்
ஆறியதோ ரஸ்திசுரம் இளைப்புத்தீரும்
ஆகாத பவுந்திரங்க ளனைத்தும்போகும்
தாரியதோர் புண்கனெல்லாந் தீர்ந்துபோகும்
ராச்சுரமும் குளிர்சுரமும் நாடாதோடும்
ஊரியதோ ருடம்பாகு மிதினாலப்பா
ஊட்டியதோர் பச்சையினால் உடல்கெட்டாரே. (23)

கெட்டாரே பிள்ளைபிள்ளை தலைமுறைக்கும்
கேடில்லை யீதுமொரு வழிதானென்பார்
மட்டான கைபாக முட்டாளுக்கு
வகைதெரியா தேயீய்ந்து மாண்டார்பாரு
கெட்டானே தான்கெட்ட கேடுமல்லால்
கெடுத்தானே லோகமெல்லாங் கெடவுந்தானே
துட்டான துட்டனுக்கு நூலீய்ந்தாக்கால்
தோஷமுண்டு பாவம்வருஞ் சொன்னேன்பாரே. ()

கெவுரிப் பற்பம்.

சொன்னதொரு கெவுரியுட பற்பங்கேளு
சூச்சமா யவுரிதனில் மூன்போற்காய்ச்சி
வன்மையாய் மருந்துதனைக் கவசஞ்செய்து
வைத்திடுவாய் வாழையுட சாம்பற்குள்ளே
பின்னமில்லை மஞ்சள்நிறக் கெவுரிதானும்
பிசகாமல் வெள்ளைநிறம் பேணிப்பாரு
கன்னமுடன் பவுந்திரங்கள் மூலரோகம்
காணாதே போய்விடுமே கண்டுபாரே. (25)

மிருதார சிங்கிப் பற்பம்.

கண்டதொரு மிருதார சிங்கிப்பற்பம்
காட்டுகிறேன் நன்றாகக் கருதிக்கேளு
பண்டான சிங்கியொரு பலமாங்கட்டி
பாரப்பா மருந்துதனைப் பரிந்துபூச
வண்டான அண்டத்துக் குள்ளேவைத்து
வளமாகக் கவசித்துப் புடந்தான்போடு
கொண்டாடுஞ் சிங்கிபற்பம் வெள்ளையாகும்
கொடுத்திடுவாய் புண்புறைகள் பிளவைபோமே. ()

செம்புத்தோட்டிப் பற்பம்.

பிளவை முதல் கரப்பானீ ரெல்லாந்தீரும்
பெருமைதரும் வைத்தியந்தான் புதுமைமெத்த
இளமையாஞ் செம்புதொட்டிப் பற்பங்கேளு
இயலான மருந்துதனைக் கவசஞ்செய்து
வளமையாய் மூக்குராட்டைக் கவசங்கட்டி
வைத்திடவே வெள்ளையாம் வைத்துக்கொண்டு
தளமையாங் குடல்வாதம் ஈரல்புத்து
சதையடைப்பு சதைவளர்த்தி சாந்தமாமே. (27)

மனோசிலைப் பற்பம்.

சாந்தமாய் மனோசிலையின் பற்பங்கேளு
தயவான மருந்துதனைப் பூசிக்கொண்டு
பாந்தமாய் வெள்ளருகைக் கவசங்கட்டிப்
பாரடா பூனீரு கீழ்மேலிட்டு
வாந்தமாய்ப் புடம்போடு நிதானம்பார்த்து
மைந்தனே பற்பமென்றால் மகத்துவமெத்த
ஏந்தவே கிரந்தியொடு கண்டமாலை
எடுத்ததொரு மனோசிலையும் பற்பம்பாரே. (28)

ரச பற்பம்.

பற்பத்தைப் பணவிடையாய்ப் பத்துநாட்கொள்
பாங்கான புண்பொடிக ளெல்லாந்தீரும்
உற்பனமாய் ரசபற்பஞ் சொல்லக்கேளு
உத்தமனே ரசம்பத்துக் கொன்றுதானும்
மெய்ப்புடைய கல்வத்தி லிட்டுக்கொண்டு
விளங்கவே அரைத்திடுவாய் தாளிச்சாற்றில்
அற்புதம்போல் மாண்டுவிடும் வில்லைசெய்து
அப்பனே காய்ந்தபின்பு சொல்லக்கேளே. (29)

கேளப்பா கஞ்சாவும் புகையிலையுஞ் சுட்டுக்
கெடியான சாம்பலதைத் தாளிச்சாற்றில்
வாளப்பா அரைத்ததனை வில்லைக்குமேல்
வாகாகக் கவசித்து மணற்குள் வைத்து
தாளப்பா மேற்சட்டி கவிழ்த்துமூடி
நன்றான மண்சீலை செய்துகொண்டு
ஆளப்பா முச்சாம மெரித்து ஆறி
அப்பனே யெடுத்துப்பார் வெண்ணீறாமே. (30)

நீறாகும் பற்பத்துக் குறுதிகண்டு
நினைவாக அனுப்பான மறிந்துபோடு
வாரான வைத்தியமுஞ் சூதத்தாலே
மைந்தனே ரசவாதஞ் சூதத்தாலே
கூரான ரசகற்பங் கொண்டபோது
கொடியதொரு நோயெல்லாங் கூறுதோடும்
சீரான பத்தியமு மில்லைசொல்லு
தேகத்தில் பேதமொன்றுஞ் செய்யாதென்னே.(31)

என்னவே ரசபற்பங் கொண்டாயானால்
எடுத்தெடுத்த நோயெல்லா மிறங்கிப்போகும்
வன்னமாய்க் குட்டமுடன் காப்பான்தீரும்
வாகான கிரந்தியுடன் சூலைதீரும்
சன்னமாம் உதரத்தில் வலியுந்தீரும்
சட்டையிடுங் குட்டநோய் தவறுண்டேபோம்
கன்னமிடுங் காலதுபோல் ரசபற்பந்தான்
காட்டினேன் சாஸ்திரத்திற் கண்டுபாரே. (32)

சாரபற்பம்.

கண்டுபார் சாரத்தின் பற்பங்கேளு
கருவான மருந்துதனைக் கட்டிக்கப்பா
விண்டிடவே பத்துக்கு ஒன்றுபூசி
விதமாகக் காயவைத்துச் சொல்லக்கேளு
பண்டுடனே புரசம்பட்டைச் சாப்பற்குள்ளே
பதித்துமே கீழ்மேலுஞ் சாம்பலிட்டு
அண்டவே மேல்சட்டி கவிழ்த்துமூடி
அப்பனே மண்சீலை மூன்றுசெய்யே. (33)

செய்துமே அடுப்பேற்றித் தீயைமூட்டிச்
சிவசிவா முச்சாமந் தீயைமாட்டி
அய்துமே ஒருவிறகா லெரிப்பாயப்பா
அப்பனே தீயாறி யெடுத்துப்பாரு
கொய்துமே தந்தமது போலேகட்டும்
கொடுநாகங் கண்டங்குங் கூர்ந்துபாரு
வய்துமே நீர்ப்பாண்டு போகும்பாரு
மகத்தான பற்பமது வைத்துக்கொள்ளே. (34)

வெங்காரப் பற்பம்.

கொள்ளவே வெங்காரப் பற்பஞ்சொல்வேன்
கொடுமையுள்ள மருந்துதனைக் கவசித்தேதான்
அள்ளவே ரவியிலிடு மூன்றுநாள்தான்
அப்பனே நாலாநா ளெடுத்துக்கொண்டு
கள்ளமாஞ் சிப்பிசுண்ணத் துள்ளேவைத்துக்
கனமாக மேல்மூடிப் புடந்தான்போடு
வெள்ளையாம் பற்பமது நீர்க்கட்டெல்லாம்
விட்டேநீர்ப் பாண்டுவிஷந் தீரும்பாரே. (35)

சீனப் பற்பம்.

தீருமே சீனத்தின் பற்பங்கேளு
திறமான கட்டிக்குப் பூசிப்போடு
பாருமே நாயுருவிச் சாம்பற்குள்ளே
பதித்துமே வைத்துநீ கவசஞ்செய்து
சேருமே முன்போலே தீயைமூட்டு
திறமான சாமமது சென்றுற்போதும்
காருமே சீனபற்பம் நீர்க்கடுப்பு
கருவான வயற்றளைச்சல் கழிந்துபோமே. (36)

வீரப் பற்பம்.

போமென்ற வீரபற்பஞ் சொல்லக்கேளு
புகழான வீரமொடு பலங்கட்டிக்கு
ஆமென்ற மருந்துதனைப் பத்துக்கொன்று
அப்பனே பூசிவிடு ரவியிற்போடு
தாமென்ற கொடுவேலி வேரரைத்து
நன்றாகக் கவசமது பொதிந்துகட்டி
வாமென்ற மண்சீலை மூன்றுசெய்து
மகத்தான சுண்ணத்திற் புடத்தைப்போடே. (37)

புடம்போட வீரமது பற்பமாகும்
　　புண்பிளவை கட்குழுகங் காணுவிட்டால்
வடம்போட்ட பற்பமதை உமிழ்நீராலே
　　மத்தித்துப்போட்டதுபோல் மூகத்திற்போடு
கடம்போட்ட நாழிகைதான் நாலுக்குள்ளே
　　கண்டிடவே தான்துளைத்துக் காத்தைவாங்கும்
நடம்போட்டுத் தகர்ந்துவிடும் வேறேகேளு
　　நன்றான பருத்திவிதை யிடித்துக்கட்டே. (38)

சவுக்காரப் பற்பம்.

கட்டவே சலஞ்சீதம் கழிந்துபோகும்
　　கடிதாக மூன்றுநாள் எண்ணெய்தன்னில்
மட்டான மாசக்காய் கிரும்புகூட்டி
　　மைந்தனே வேகவைத்துப் பஞ்சிலூட்டி
வட்டாகப் போட்டவுடன் செம்புண்ணுகி
　　வாரமதுக் குள்ளாறும் வளமைகேளு
பட்டாரச் சவுக்காரப் பற்பங்கேளு
　　பாங்கான மருந்துதனைப் பரிந்துபூசே. (39)

பூசியே ரவிதனிலே காயவைத்துப்
　　புகழ்பெறவே இலுப்பைப்புண் ணுக்குதன்னை
வாசியாங் கவசமது மேலேசெய்து
　　மண்சீலை யதுமேலே வலுக்கச்செய்து
நேசியாங் கோழியென்ற புடத்தில்நீறும்
　　நிலையான சவுக்காரப் பற்பமப்பா
காசியாம் வலிகுன்மம் வாய்வுக்கட்டி
　　கரைந்திடுமே அனுப்பானங் கண்டுபோடே. (40)

சூடப் பற்பம்.

கண்டுபார் சூடனுட பற்பங்கேளு
　　கனமான மருந்துதனைப் பூசியேதான்
விண்டுபார் கற்பூர வல்லிதன்னை
　　விதமாகக் கவசித்து மண்சீலைசெய்து
நன்றாகச் செய்ததனை ரவியிற்போடு
　　நலமான குக்குடத்தில் நீறிப்போகும்
சென்றுபார் சயகாச மனுப்பானத்தில்
　　செய்திடவே தீருமப்பா தீர்க்கந்தானே. (41)

நவரத்தினப் பற்பம்.

தீர்க்கமாய் நவரத்தின மொன்பதுந்தான்
செய்திடவே மருந்ததனைப் பூசிக்கொண்டு
ஆக்கமாய்ப் புடம்போட நீறுமயாரு
அரகரா பற்பமது யாருக்காகும்
தேர்க்கவே ராசர்களுக் குரித்தாம்பாரு
சித்தருக்குக் காயசித்தி திறமாம்பாரு
மூர்க்கமாய்ச் சரக்கினுட வியாங்கண்டு
முடித்தவனே ரசவாதி மொழிவோம்பாரே. (42)

மொழிந்திடவே உபாசந்தான் நூற்றிரண்டுபத்து
முறையான லவணமது இருபத்தைந்து
கழிந்துநின்ற லவணமொடு நவலோகந்தான்
காட்டினேன் நவரத்தின பற்பத்தோடு
வழிந்துமே வகையொன்று களஞ்சியொன்றாய்
மைந்தனே நிறுத்ததனைக் கல்வத்திட்டு
கழிந்துநீ கடைச்சரக்கு அறுபத்தினாலும்
கருக்கவே யிடித்ததனைப் பொடியாய்ப்போடே (43)

போட்டுமே கிசாயமதை வற்றவைத்துப்
புகழாகக் குறுக்கியதை விட்டுஆட்டி
நாட்டுமே குன்றியிடை உருட்டுப்போடு
நலமாக ரவிதனிலே காய்ந்தபின்பு
பூட்டுமே தேவிபதந் தன்னில்வைத்துப்
பூசைசெய்து செப்பதனிற் பதனம்பண்ணு
காட்டுமே சிலேற்பன நதா னிழுக்கும்போது
கஸ்துரிக் கிசாயத்தி லொன்றுதாக்கே. (44)

தாக்கவே சிலேற்பனங்கள் தெரித்துப்போகும்
தண்ணீரு போலவே கரைந்துபோகும்
வாக்கசந்து யிருப்போர்க்கு உயிருண்டாகும்
வாயுவினு லக்கினியும் வளருப்பாரு
நோக்கியே கண்விழித்துப் பேசுவார்கள்
அடக்கமெல்லாந் தான்தீர்ந்து யெழுந்திருப்பார்
போக்கதுவே வயதுவிதி யிவளவென்றால்
பொசித்திடவே யாகாது போகும்பாரே. (45)

போகாத விதிதானே தினமொன்றுகப்
பொசித்துவிடு மண்டலத்திற் சட்டைதள்ளும்
வாகான காயசித்தி யாகும்பாரு
வருடமது கொண்டிடவே வாசிசித்தி
யோகமதில் கலைநாலுங் கட்டிப்போகும்
உத்தமனே வாதமெல்லா முறுதியாகும்
சாகாம லிருப்பதற்கு விதியுமாச்சு
சற்குருவி னருளாச்சு சார்ந்துபாரே. (46)

நவரத்தினச் சேந்தூரம்

சார்ந்துபார் செந்தூர மிதிலேசொல்வேன்
தயவான இந்துப்புச் சவுக்காரந்தான்
வார்ந்ததொரு சீனமுடன் சாரங்காரம்
வளமாக ஐந்தாச்சு மின்னங்கேளு
பார்ந்திடவே சிங்கியொடு கெவுரிகெந்தி
பதமாக மனோசிலையும் ரசமுமைந்து
ஆய்ந்துபார் இந்திரகோபஞ் செம்பட்டுப்பூச்சி
அழகான கொம்பரக்குப் பூச்சிபோடே. (47)

இரும்புச் சேந்தூரம்

பூச்சியுடன் பூநாகஞ் சிவந்தஅட்டை
புகழாக இதுவெல்லாங் கல்வத்திட்டு
ஆச்சியமா யரைத்திடுவா யுவர் நீராலே
அப்பனே காயவைத்துப் பதனம்பண்ணி
வாச்சுதே தொட்டதெல்லாஞ் செந்தூரந்தான்
வாகாக ஆடுதற்கு வகையைக்கேளு
காச்சுதே இரும்புதன்னைத் தகடாய்த்தட்டிக்
கனமான மருந்துதனைக் கொண்டுபூசே. (48)

கொண்டுமே உதியம்பட்டை தனிற்பொதிந்து
குறையாமற் செங்கல்மாப் பொடிகள்வைத்து
மண்டுமே மேல்மூடிச் சீலைசெய்து
மைந்தனே கெசபுடந்தான் வைத்துப்போடு
தண்டுமே ஒருபுடத்திற் செந்தூரந்தான்
தப்பாது முருக்கம்பூ தானொவ்வாது
பண்டிதமாய்ச் செந்தூரஞ் செய்வாயாகில்
பாசவினை யொழிந்துவிடும் பாரந்துபாரே. (49)

காந்தச் செந்தூரம்.

பரிந்துமே காந்தத்தை நொருக்கிக்கொண்டு
பார்மகனே மருந்துதனைப் பிரட்டியேதான்
விரிந்ததனைக் காயவைத்து விருசம்பட்டை
விளங்கவே தானரைத்து அடையாய்த்தட்டி
கரிந்திடவே யதிற்பரப்பி ஓடுமூடி
கனமாகச் சீலைசெய்து புடந்தானப்பா
எரிந்திடவே கெசபுடந்தான் போட்டாயானால்
இதுபோலே செந்தூர மில்லைதானே. (50)

இல்லையென்ற காந்தச்செந் தூரத்தாலே
எதிர்த்தெதிர்த்த வியாதியெல்லா மிடைந்தேபோகும்
தொல்லையென்று விட்டாலுந் தோஷமுண்டு
சொல்லிலே யினிப்புவந்து தோன்றுமோபார்
வல்லபமா யறிவோடே கூடிக்கொண்டு
வளர்ந்திடவே வேதாந்த சித்திசெய்தால்
இல்லறத்தில் வாழ்ந்தாலென் காட்டில்வாழ்ந்தென்
எடுத்ததொழில் சித்தர்மூலி யிசைப்பான்பாரே. (51)

அப்பிரேகச் செந்தூரம்.

இசைக்கவே அப்பிரகந் தன்னைக்கேளு
எடுத்திடுவாய் தகடாக வாங்கிக்கொண்டு
பசைக்கவே பலமொன்று யெடுத்துக்கொண்டு
பத்திரமாய் வெள்வேலம் பட்டைக்குள்ளே
நசைக்கவே வைத்ததனை மண்சீலைசெய்து
நாலுசாம மெரித்துப் போடுவாய்நீ
அசைக்கவே செந்தூரமாகுமப்பா
ஆகுமடா ஒருபுடத்தி லருமைதானே. (52)

தாம்பிரச் செந்தூரம்.

அருமையென்ற செந்தூரஞ் சயநோவுக்கு
ஆகுமடா பத்தியங்க ளரையவேண்டாம்
ஒருமையென்ற தாம்பிரத்தைத் தகடாய்த்தட்டி
உத்தமனே மருந்துதனை உரைத்தேபூசு
கருப்பான சாரணையைப் பொதிந்துகொண்டு
கணக்கவே ஓட்டிலிட்டுப் புடந்தான்போடு
தருமையென்ற தாம்பூரச் செந்தூரந்தான்
தப்பாது குன்மமெல்லாந் தனியேபோமே. (53)

வெள்ளிச் செந்தூரம்.

போமென்ற வெள்ளிச்செந் தூரங்கேளு
போக்கோடே மருந்துதனைப் பூசிக்கொண்டு
நாமென்ற வன்னியுட பட்டைதன்னில்
நன்றாகத் தான்பொதிந்து ஓட்டிலிட்டு
காமென்ற சீலைமண் செய்துகொண்டு
கனமாகப் புடமிடவே செந்தூரந்தான்
மானென்ற தாதுவிர்த்தி மிகவுண்டாகும்
மைந்தனே தங்கத்தின் வரிசைகேளே. (54)

தங்கச் செந்தூரம்.

வரிசையாய் மருந்துதனைப் பூசிக்கொண்டு
மைந்தனே காட்டாத்திப் பட்டைதன்னில்
பரிசையாய்ப் பொதிந்துமே ஓட்டிலிட்டுப்
பாங்காக மண்சீலை செய்துகொண்டு
பிரியமாய்ப் புடம்போடு கெசந்தானப்பா
பேரான செந்தூரம் பேசொண்ணாது
உரிசையாய் உறங்கினதோர் சுகபோகிக்கு
உத்தமனே மருந்திதுதான் உகந்துபாரே. (55)

வங்கச் செந்தூரம்.

பாரப்பா வெள்ளீயத் தகட்டுக்குத்தான்
பாங்கான மருந்துதனைப் பூசிக்கொண்டு
ஆரப்பா வாகையுட பட்டைத்தூளில்
அப்பனே புடமிடச்செந் தூரமாகும்
ஊரப்பா காரீய மதுதனக்கு
உறவாக மருந்துபூசிக் காய்ந்தபின்பு
வேரப்பா புங்கவேர் தன்னில்வைத்து
விதமாகப் புடம்போடச் செந்தூரமாமே. (56)

நாகச் செந்தூரம்.

செந்தூரம் தின்றாக்கால் தேகந்தங்கம்
சிலைமகன்போ லாகுமடா தேகஞ்சித்தி
சந்தேகமில்லையடா சொல்லக்கேளு
சார்பான நாகத்தின் கட்டிக்கப்பா
முந்தவே மருந்ததனைப் பூசிக்கொண்டு
மூசியாமற் பூவரசின் பட்டைதன்னில்
வெந்திடவே புடமிடவுஞ் செந்தூரந்தான்
விஷமான நாகம்போல் மேவிப்பாரே. (57)

நவச்சாரச் செந்தூரம்.

மேவியதோர் நோய்களுக்கு நாகம்போலே
விட்டுமே நாகச்செந் தூரங்காணும்
தாவியே எப்பிளப்பு இருமலீளை
தப்பாது காசநோய் சாந்தமாகும்
கூவியே நவச்சாரந் தன்னிலப்பா
குணமுடனே தான்பூசிக் காயவைத்து
பாவியே கருமணலிற் புடத்தைப்போடு
பாங்கான சாரச்செந் தூரமாச்சே. (58)

பல செந்தூரம்.

ஆக்சுதே சீனமுடன் காரஞ்சூடன்
அப்பனே சவுக்கார மிந்துப்போடு
போச்சுதே யிதுவெல்லா மருந்தைப்பூசி
புகழாக ரவியிலிட்டுக் காய்ந்தபின்பு
ஏச்சுதே வெள்ளாட்டின் புழுக்கைத் தூளில்
இட்டிடுநீ கீழ்மேலு மிட்டுவைத்து
வாச்சுதே மேல்மூடிச் சீலைசெய்து
மைந்தனே புடமிடச்செந் தூரந்தானே. (59)

செந்தூரஞ் சீனமது கடுப்புக்காகும்
சேரவே காரமது நீர்க்கட்டுக்காகும்
பந்தமில்லா இந்துப்பு வாய்வுக்காகும்
பகுமான சூடனது வாய்வுக்காகும்
சொந்தமுள்ள சவுக்காரம் வாய்வுக்கட்டிக்காகும்
சுகமாக அனுப்பான மறிந்துசெய்வாய்
வந்ததொரு யிம்முறையை வெளியாய்ச்சொன்னேன்
மகிழ்வாக உழைத்தவன்தான் செய்வான்பாரே. (60)

பார்சொன்னே னென்னைப்போல லார்தான்சொன்னார்
பாரதனி லெவருமே சொல்லவில்லை
சீர்பெறவே வெளியாகச் சொல்லிப்போட்டேன்
செகத்திலுள்ளோ ரிதையறிந்து செய்வாராகில்
பேர்பெறவே மகத்தான சித்தராவார்
பேருலகிற் கீர்த்தியது மெத்தவுண்டு
நேர்பெறவே யிந்நூலை வெளிவிடாதே
நேர்த்தியுடன் பெரியோரைத் தேடிக்காணே. (61)

வேடியுப்புச் செயநீர்.

தேடிப்பார் வெடியுப்புச் செய நீர்தன்னைத்
தெளிவாகச் சொல்லுகிறேன் செவ்வையாக
ஆடிப்பார் கல்லாணை பலமோபத்து
அரகார புளியதனைக் கூடச்சேர்த்து
கூடிப்பார் சீனமொடு பூநாகந்தான்
கோர்த்துவிடு கற்பூரங் காரசாரம்
நாடிப்பார் வகைக்குவொரு களஞ்சதாக
நாட்டடா கூட்டியொன்று யரைத்துருட்டே. (62)

அரைத்துருட்டித் தீயதனிற் கொழுத்தினுக்கால்
அப்பவே சுண்ணம்பாய் நீறிப்போகும்
குறைவில்லை சொல்லுகிறேன் குழந்தாய்கேளு
கோடிபொரு ளீய்ந்தாலு மீய்ந்திடாதே
நிறைவுள்ள சுண்ணமது பதினாறுக்கு
நினைவாகக் கூட்டடா சாரமொன்று
மறைவில்லை பனிநீரில் வைப்பாயப்பா
மாறாது சுண்ணமது காரந்தானே. (63)

காரந்தான் கடுங்கார மெத்தவப்பா
கழறுவேன் கோடிவித்தை யாடலாகும்
ஓரமன்றிச் சொன்னேனே யுண்மையையா
உற்றுப்பா ருனக்குள்ளே வாதமாடும்
பாரமல்ல யிவ்வேதை காணுதற்குப்
பரமான போகரிஷி ஞானம்நூறில்
சாரமாய்ச் சொல்லிவிட்டார் வெடியுப்பையா
சமுசயங்க ளில்லையடா நூலைப்பாரே. (64)

நூல்பாரு போகரிஷி வாதமெல்லாம்
நுணுக்கமாய்த் திறந்தாரே மறைவில்லாமல்
கால்பாரு நூல்பாரு கண்ணே சொன்னேன்
கானகத்துச் சித்தரெல்லா மெச்சுவார்பார்
பால்போலாம் போகரிஷி ஞானம்நூறு
பாருலகிற் பாபிகளுக் கொவ்வாதையா
சேல்கெண்டை தானீய்ந்து விரால்கொண்டாற்போல்
சேவித்து யென்பெயரைச் சொல்லிவாங்கே. (65)

மேகச் சூட்டுக்குக் கியாழம்.

வாங்கடா யின்னுமொரு கருமானங்கேள்
வளமையுள்ள யென்குருவுஞ் சொன்னவித்தை
சாங்கமுடன் சையோக மிகுத்தலாலே
சாருமே உஷ்ணமது அதிகங்காணும்
பாங்கியர்மேல் மோகமது கொண்டபேர்க்குப்
பகருவேன் குடிநீராங் கியாழமப்பா
சோங்காமல் தாணிருக்க வாலிபர்க்குச்
சொல்லுவேன் நன்னாரி பலமைந்தாமே. (66)

நன்னாரி பலமைந்து மிளகிரண்டு
நற்சீரஞ் சோம்புடனே கொத்தமல்லி
மண்ணுவேன் வகைக்குஅரைப் பலமதாகும்
பாங்கான சுக்கதுவும் பலமேஒன்று
உன்னிதமாய் நெற்பொறி பன்னீர்புட்பம்
உறவாகத் தூளாக்கி வைத்துக்கொண்டு
நன்னயமா யரைப்பலந்தான் தூளெடுத்து
நல்லஜல மாழாக்கு மூன்றிற்போடே. (67)

போட்டுமே நாலிலொன்று சுண்டக்காய்ச்சிப்
பொங்கமுடன் வடியிட்டுச் சீனியோடு
தாட்டிகமா யாவின்பால் கூடச்சேர்த்துச்
சாப்பிடவே சூடதுதான் பறந்துபோகும்
வாட்டமின்றித் தினந்தோறு மருந்தலாகும்
வையகத்தில் பத்தியந்தா னில்லையையா
நாட்டமுடன் சையோகந் தினந்தோறுந்தான்
நடத்தலாம் மேகமது பிறவாதாமே. (68)

கர்ப்பூரசிலாசத்துப் பற்பம்.

ஆமேதான் கற்பூர சிலாசத்தைதான்
அப்பனே என்சீடா அறிவுள்ளோய்நீ
நாமேதான் கற்பூர சிலாசத்தப்பா
நாயகனே பலமொன்று கெந்தகந்தான்
தாமேதான் பலமொன்று தாளிச்சுண்ணம்
தயங்காதே அரைப்பலந்தான் கூடச்சேர்த்து
ஆமேதா னரைத்தொன்றாய் ஓட்டில்வைத்து
ஆகாகா கொழுத்தியபின் சொல்லக்கேளே. (69)

கேளடா நிம்பழத்தின் சாற்ருலாட்டிக்
கெடியான சிலாசத்துக் கவசஞ்செய்து
நாளடா போக்காது புடமோ கேளு
நவிலுவேன் குக்குடத்தில் நீறிப்போகும்
வாளடா பணவிடைதான் நவநீதத்தில்
வகைபெறவே மண்டலந்தான் காலதாகும்
பாளடா உண்டுவர மேகங்காந்தல்
பறக்குமே பற்பத்தின் மகிமையாலே. (70)

பற்பத்தி லனுப்பானஞ் சொல்லக்கேளு
பகருகின்ற கலியாணிப் பூசணிக்காய்
அற்புதனே நாலிலொன்று எடுத்துக்கொண்டு
அறைந்தபற்பம் பணவிடைதான் சீனியோடு
கற்பமாய்க் கலந்துண்ண ஆறுவேளை
கலக்கமில்லை பித்தமது நாற்பதும்போம்
உற்பனமாய் நீரிழிவு கண்டபேர்க்கு
ஓடுமே வாழையென்ற பழத்தில்தானே. (71)

தானான மண்டலந்தான் பழத்திற்கொள்ள
தடையில்லை நீரிழிவு தீமேகம்போம்
பானான நவநீதந் தன்னிற்கொண்டால்
பறக்குமே நீரடைப்பு சதையடைப்பு
தேனான மேகவெள்ளை யோடுதானும்
தேங்குகின்ற கல்லடைப்புச் சொல்லாதோடும்
மானான தேகமது குளிர்ந்துகாணும்
மகிதலத்தி லிம்முறைதான் மெத்தநன்றே. (72)

நன்ருன யிம்முறைபோ லில்லையப்பா
நவிலவில்லை நாதாக்கள் மறைத்துச்சொன்னுர்
குன்றேகேள் கோடான கோடிசித்தர்
கொட்டினுர் வெகுகோடி மருந்தையெல்லாம்
தன்னியனே யான்சொன்னேன் மறைவில்லால்
தயங்காதே தாரணியி லுனக்காய்ச்சொன்னேன்
இன்னிலத்தில் மானிடர்கள் சையோகத்தில்
இடுக்கனடை யாதிருக்க வியம்புவேனே. (73)

முத்துப் பற்பம்.

இயம்புவேன் முத்துப்பற்பஞ் சுருக்கமப்பா
எழிலான முத்துச்சிப்பி தனையெடுத்து
நயம்பெறவே பத்தெருவிற் போட்டெடுத்து
நாயகனே கட்டுக்கொடி கவசித்தேதான்
சயம்பெறவே பத்தெருவிற் புடந்தான்போடு
சாங்கமுடன் கண்ணியிலே யொன்றுபோடு
வயமான கையானி லொன்றுபோடு
வாகான முள்ளங்கி யொன்றுபோடே. (74)

போடவே யிலந்தையிலே ஒன்றுபோடு
போட்டபின்பு மண்டலந்தான் வெண்ணெய்யிற்
நாடவே மேகமது விட்டேயோடும் [கொள்
நானிலத்தில் போகிக்கு வேண்டுமையா
வாடவே வேண்டாங்காண் சயரோகம்போம்
வளமையுள்ள மேனியது மின்னற்காணும்
நீடவே சிங்கியது கூறக்கேளு
நெடிதான கலைமானின் கொம்பதாமே. (75)

சிங்கிப் பற்பம்.

ஆமேதான் கொம்பதனைப் புடமேபோட்டு
அப்பனே கழற்காயி னிலையரைத்து
நாமேதான் சொன்னபடி புடமேபோடு
நவிலாதே நச்சுக்கீரை யதனிலொன்று
தாமேதான் மணத்தக்காளி யதனிலொன்று
தன்மையுள்ள ஆவின்பால் விட்டரைத்து
ஆமேதான் புடம்போட்டு எடுத்துப்பின்பு
அரகரா திரிகடுகிற் கொள்ள நன்றே. (76)

திரிகடுகு சூரணத்திற் கொண்டாயானால்
இயங்கியே வாயுவெல்லா மோடிப்போகும்
பிரியமுடன் நாற்பதுநாள் கொள்வாயப்பா
பிசகில்லை யான்சொன்ன மார்க்கமையா
உரியவனே ஆவினெய் யாவின்பாலை
உட்கொள்ளத் தேகத்துக் குறுதியப்பா
கரிமுகனுக் குரியவனு முருகன்றானும்
காட்டினு ரென்னுசா னகத்தீசர்க்கே. (77)

என்னுசான கத்தியர்க்குச் சொன்னவாறு
எடுத்துரைத்தா ரெந்தனுக்குப் போக்கையெல்லாம்
உன்னிதனே யிந்நாலும் பொய்யாதையா
உலகினிலே மட்டியவன் காணப்போமோ
நன்னயமாய் வாய்ஞானம் பேசியல்லோ
நாடுவார் நூலதனைக் கேட்பாரையா
பன்னுவா யில்லையென்று கருமிகட்குப்
பார்த்துநீ கொடுக்காதே நூல்காப்பாயே. (78)

பவளப் பற்பம்.

காப்பாரே பவளப்பற்பஞ் சொல்லக்கேளு
கண்மணியே வண்மணியே கருத்தாயப்பா
சீப்பாதே பவளமது பலந்தான் கொண்டு
சிற்பரனே நிம்பழத்தின் சாறுதன்னால்
கோப்பியமா யூறவைத்து ஐந்தாநாளில்
கொற்றவனே தாமெடுத்துச் சொல்லக்கேளு
தீப்பான பத்தெருவிற் புடந்தான் போடு
திகழான வெந்தயக் கீரைச்சாறே. (79)

சாறேதான் விட்டரைத்துப் புடமேபோடு
சாங்கமுடன் பிரண்டைச்சாறு தன்னிலொன்று
வாறேதான் கையாணின் சாறிலொன்று
வளமையுடன் பசளையிலே யொன்றுபோடு
கூறேதான் இதற்குநிக ருண்டோவென்று
கொடிதான காசங்க ளெல்லாமோடும்
தேறேதா னிப்போக்கு வெகுசுருக்கு
தெளிவுள்ளா யுந்தனுக்காய்ச் சொன்னேன்பாரே. ()

கருடக்கல் பற்பம்.

பாரடா கருடக்கல் பற்பங்கேளு
பாங்கான கருடக்கல் சுட்டெடுத்து
காரடா கீழ்க்காயை யறைத்துநன்றாய்க்
கண்மணியே கவசித்துப் புடமேபோடு
ஊரடா திரியாதே பண்ணைக்கீரை
உத்தமனே கவசித்துப் புடமேபோடு
சாரடா வரமூலி யதனிலொன்று
சார்பாகப் போட்டெடுத்தால் நீறிப்போமே. (81)

படிகாரப் பற்பம்.

போமடா யின்னுமொரு போக்குச்சொல்வேன்
பொறுமையுள்ள கண்மணியே புகலக்கேண்மோ
தாமடா படிகாரம் பலமேகொண்டு
தன்மையுள்ள நவநீத மேலுங்கீழும்
நாமடா குடுவையிலே வைத்துப்பின்பு
நலமான பத்தெருவிற் புடந்தான்போடு
வாமடா படிகார பற்பமாச்சு
வளமையுட னெடுத்ததனைப் பதனப்பண்ணே. (82)

பலகரைப் பற்பம்.

பண்ணவே பலகரையாம் பற்பங்கேளு
பாலகனே பலகறையை நிம்பழத்தில்
தண்ணவே யூறவைத்து ஐந்தாம்நாளில்
தானெடுத்துப் புடமதுவே போட்டபின்பு
திண்ணவே பழச்சாற்று லாட்டியப்பா
தீர்க்கமுடன் புடம்போட்டு எடுத்துமேதான்
நண்ணவே யாவின்பால் விட்டேயாட்டி
நன்மைபெறப் புடம்போட்டு எடுத்துவையே. (83)

பாஷாணக் கட்டு.

வைத்துமே பாஷாணப் போக்குச் சொல்வேன்
வையகத்தில் மறைப்பின்றித் திறவுகோற்போல்
கைத்தவமாய்ப் பாஷாணம் பலமேவாங்கிக்
கழறுவேன் தேள்கொடுக்குச் சிறியதாக
தைத்துமே கிருமியென்ற தேக்கினோடு
சாதகமாய்ச் சாறுபிழிந்து நாலுசாமம்
இத்தகையாய்ச் சுருக்கிட்டு எடுத்துப்பாரு
என்னசொல்வேன் பாஷாணக் கட்டதாமே. (84)

கட்டான கட்டதனைத் தாம்பிரத்தில்
காட்டிவிடு பத்துக்கு ஒன்றாவீதம்
திட்டான திட்டமதா யீய்ந்தபின்பு
தெளிவுள்ளாய் மதியதுதா னுறுக்கொன்று
சட்டமுடன் முன்சேர்த்து எடுத்துப்பாரு
தாரணியில் வெள்ளிவித்தை யென்னசொல்வேன்
நட்டமது வாராது யிந்தப்போக்கு
நாயகனே காட்டாதே கருமிகட்கே. (85)

குன்மத்திற்கு-

காட்டாதே யாகோபு யென்பேராகும்
கண்மணியே உப்பதனைக் கழறக்கேண்மோ
தாட்டிகமாய்க் குன்மமென்ற ரோகமெல்லாம்
தளரவே சேர்த்துப்பு யிந்துப்போடு
வாட்டமின்றி வளையலுப்புக் கரியுப்பையா
வளமான பொட்டிலுப்பு நவச்சாரந்தான்
நாட்டமுட னுழமண்ணு சரக்கெல்லாந்தான்
நாயகனே யோரிடையாய் நிறுத்துக்கொள்ளே.(86)

கொள்ளவே நிம்பழத்தின் சாற்றாலாட்டிக்
கொற்றவனே பத்தெருவிற் புடந்தான்போடு
தள்ளவே கையானின் சாறிலொன்று
தகமையுடன் மேனிச்சா றதனிலொன்று
கள்ளமின்றிப் பிரண்டைச்சா றதனிலொன்று
கருக்காகக் கெச்சக்கா யதனிலொன்று
வள்ளலே புடம்போட்டு எடுத்துமைந்தா
வாகாகத் தேன்விட்டு ஆட்டிக்கேளே. (87)

கேளடா மெழுகதுபோ லுருட்டிமைத்தா
கெடியான சுண்டைக்காய் வீதங்கொள்ள
நாளடா போக்காது பத்துநாளில்
நாடாது குன்மமென்ற ரோகமெல்லாம்
வாளடா இம்மருந்து போலேயுண்டோ
வளமான ரப்பமடா குன்மத்துக்கு
பாளடா என்னுசான் சொன்னமார்க்கம்
பாருலகிற் பொய்யாது மெய்யதாமே. (88)

மெய்யான இருவிரலை வைத்துப்பார்பார்
மேன்மையுள்ளாய் ஆத்தாளின் கிருபைவேண்டும்
பொய்யாத ஞானமென்ற மார்க்கமையா
புண்ணியனே நீபொருந்த யெல்லாஞ்சித்தி
நையாத மாந்தருக்கு உய்யாதையா
நாடதனில் முனியாவாய் சித்தனுவாய்
கைதவமாய் ஆத்தாளின் குளேவேண்டிக்
கண்மணியே அந்தரங்க பூசைபண்ணே. (89)

சித்தர்கள் மகிமைகூறல்.

பேச்சப்பா யாகோபு சொன்னேனையா
பொன்னகமாம் பொதிகமலை போயிருந்தேன்
வாச்சுதென்று மகாகோடி சித்தரெல்லாம்
வகையுடனே எனையழைத்து ஆசிகூறி
பேச்சப்பா வுபதேச மெனக்களித்துப்
பேருலகிற் சுகமாக வாழ்வாயென்று
காச்சலின்றி வரமளித்துக் கலந்துகூடிக்
கழறினார் நாதாக்க ளொன்றாய்த்தானே. (90)

ஒன்றாகச் சேர்ந்தல்லோ ஏதுசொல்வார்
ஓகோகோ இமயகிரி போவோமென்பார்
குன்றான இமயகிரி யிருபத்தொன்று
கொற்றவனே வரையுண்டு யார்தான்போவார்
என்றல்லோ கூறையிலே சித்தரெல்லாம்
எழுந்தாரே போகரிஷி முன்னதாக
கன்றான இமயகிரி யதனிற்செல்ல
கடினமில்லை யென்றோடு வருவீர்காணே. (91)

வருவீர்க ளெனவுரைக்கப் போகர்தானும்
வளமையுள்ள நாதாக்க ளெழுந்தாரையா
தருமதுரைச் சித்தரெல்லா மெனையழைத்தார்
தயங்கினே னெப்படிநான் வருவேனென்று
ஒருகுளிகை கெவுனமது தந்தாரையா
ஓகோகோ வாயதனி லடக்கம்பண்ணி
குருவியது பறந்தாற்போல் சித்தரோடு
குறைவின்றி இமயகிரி வரைசென்றேனே. (92)

கிரியான சதுரகிரிக் குவடுக்குள்ளே
கிருஷ்ணன்முதல் நவகோடி ரிஷிகளெல்லாம்
உரிமையுடன் காண்பித்தார் போகர்தானும்
உரைப்பதற்கு நாவில்லை பாவுமில்லை
கரிகள்முதல் பலமிருகச் செந்துவெல்லாம்
கணக்கிடவே முடியாது மகிமைதன்னை
சரிந்தவய தானோர்கள் பால்யராகச்
சாகாமற் றானிருக்க மூலியுண்டே. (93)

உண்டேதான் பிரம்மாவின் பதிதானங்கே
உத்தமனே காலனுட பதியுமங்கே
சண்டமா ருதம்போன்ற அரக்கரங்கே
சார்பான கைலையங் கிரிதானங்கே
பண்டான சாத்திரத்திற் சொன்னதெல்லாம்
பாலகனே யங்குண்டு சிவகணங்கள்
கண்ணான நாதாக்க ளருளினாலே
கழறவென்றால் முடியாது என்றால்தானே. (94)

முடியாது முனிவருட மகிமைகூற
முன்னவனுஞ் சதாசிவனார் பதிதானப்பா
படியான வரையதுதா னிருபத்தொன்றில்
பாங்குடனே தானிருந்தா ருமையினோடு
அடிமையென்று தாள்பணிந்தோ மவரையப்பா
அருள்புரிந்தா ரெங்களுக்குச் சாம்பமூர்த்தி
கடினமது இமயகிரி யுயரங்கூறக்
காணவென்றாற் போகாது நூலைத்தேடே. (95)

நூலான போகரே ழாயிரத்தில்
நுணுக்கமுடன் தானறிவாய் மகிமையெல்லாம்
பாலான பாலதுபோல் பாடிவைத்தார்
பார்த்திபனே வரையதுதா னிருபத்தொன்றில்
சேலாகத் தானிருக்கு மூளவையெல்லாம்
சேர்த்தொன்றாய்த் திரட்டிவைத்தார் நூலிலப்பா
மாலான மகாவிஷ்ணு பள்ளிகொள்ளும்
மகத்தான பெருங்கடலாம் போகர்நூலே. (96)

மகத்தான யிமயகிரி கடந்துமேதான்
மன்னவனே குளிகைகொண்டு சித்தரோடு
சகமயங்கச் சென்றேனே வடபாகத்தில்
தற்பரனும் புசுண்டரிஷி யடவிசென்று
அகமகிழ்ந்து அவர்பதத்தை வேண்டிநின்றோம்
ஆரப்பா நீங்களென்று வினவினார்பார்
மகத்தான பொதிகைமலைச் சித்தரென்று
மாமுனிக்குத் தானுரைக்க மகிழ்ந்திட்டாரே. (97)

இட்டாரே எங்களுக்கு ஆசிகூறி
இருங்களென்று தானுரைக்க யானெழுந்து
இட்டமுடன் சுற்றிவந்து தாள்பணிந்து
சிவசிவா வென்றெழுந்து நின்றேனையா
பட்டமாந் தழைக்கநீ பணிந்ததென்ன
பகருவாய் பாலகனே யெனப்புசுண்டர்
சட்டையது போக்காத புசுண்டநாதா
சாமிநீ யெந்நாளிங் கடைந்திர்தானே. (98)

தானான யென்குருவே யென்றுகேட்கச்
சாற்றினார் பிரளயந்தான் நூறுகண்டேன்
தேனான யாகோபு சொல்லக்கேளு
தெளிவுள்ளாய் பரமசிவன் தானழைத்தார்
மானான மானேந்தி யழைத்தபோது
மைந்தனே யவ்விடந்தான் போயிருந்தேன்
பானான மனோன்மணியாள் பாகன்றானும்
பகருவாய் புசுண்டாய்நான் கேட்டவாறே. (99)

புசுண்டர் சொல்வது.

கேட்டபடி தானுரைப்பா யென்றுநாதன்
கேட்டாரே யெத்தனையு மெவ்வாறென்னில்
நாட்டமுள்ள புசுண்டரேயில் வுலகமெல்லாம்
நக்ஷத்ரங்கள் ரிஷிகள்முதல் பிரம்மாவிஷ்ணு
திட்டுபுக ழுலகெல்லாங் கடவுளான
ஜெகதீசன் யானழியும் வழியெவ்வாறு
நாட்டிகமாய் மறுபடியும் பிறக்கும்வாறு
சாங்கமுடன் தானியம்ப வேண்டும்பாரே. (100)

வேண்டுமென்று பரமசிவ னென்னைக்கேட்க
வெளியிட்டேன் யென்சாமி கடவுளானே
ஆண்டியெனு மென்தேவ சிவமேகேளு
அரகரா பிரளயந்தான் வருகும்போது
மாண்டுவிடு வார்சித்தர் யோகியெல்லாம்
மகாதேவா தேவர்முதல் பிரம்மாவிஷ்ணு
தாண்டுவார் மானிடரு மழிந்துபோவார்
தற்பரனே யுலகமெல்லாஞ் சலமாய்ப்போமே. (101)

போகுமே சீவசெந்து புற்பூண்டெல்லாம்
புண்ணியனே அடியேனுங் காக்கைபோல
ஏருவே னுகாயந் தன்னில்நாதா
என்னசொல்வேன் பார்த்துக் கொண்டிருக்கும்போ [அ
வாகுடைய வாழியிலே யாலின்மேலே
வளருதே யக்கினியாந் தம்பம்சுவாமி
கஉகுத்தன் நீரல்லோ கம்பந்தன்னில்
கலந்துகொண்டீ ரப்போது பார்த்தேன்தானே. ()

அப்போது தம்பமது சிகப்புப்பச்சை
ஆரகரா போலவல்லோ சோதிகண்டேன்
அப்போது மூன்றுமுக்கால் நாழிகைக்குள்
அதிலிருந்து பச்சைநிறப் பெண்ணணங்கு
அப்போது தாண்வெடித்து வெளியில்வந்து
அய்யனே கையமர்த்தி நின்றாள்பாரு
அப்போது அவளருகில் நீரும்வந்து
ஆண்டவரே நிற்கின்றீர் அறிவேன்றானே. (103)

ஆண்டவனே அவள்வந்து உலகமெல்லாம்
ஆகாகா வுண்டுபண்ணி பிரம்மாவிஷ்ணு
தாண்டவனே புற்பூண்டு சீவசெந்து
தன்மையுடன் மனிதர்களை யுண்டுபண்ணி
ஈண்டவனே யுந்தனையுங் கடவுளாக்கி
இடப்பாகந் தானமர்ந்தா ளெந்தனுத்தாள்
ஆண்டவனே சத்தியவள் சிவமும்நீரே
அய்யனே நீரவளு மொன்றுதானே. (104)

ஒன்றாகி யிரண்டாகி யேகமாகி
உலகெல்லாந் தானிறைந்த பொருளுமாகி
கன்றாகிப் பசுவாகிக் கடவுளாகிக்
கருதுகின்ற வைம்பத்தோர் லக்கமாகி
குன்றாகி யணுவாகி யைந்தெழுத்தாய்க்
கோடான மூக்கோண நாற்பதாகி
நன்றான வாறெழுத்தா யெட்டெழுத்தாய்
நாயகனே பத்தெழுத்தாய் நின்றீர்தானே. (105)

யாகோபு சொல்லுவது.

தானான சோதிமயம் நீர்தானென்று
 தற்பரற்குத் தானுரைத்தார் புசுண்டர் தானும்
கோனான புசுண்டரவர் சொன்னசொல்லைக்
 கொற்றவனே யுந்தனுக்குச் சொன்னேனப்பா
தேனான என்மகனே தெளிவுள்ளானே
 தேசமதில் புசுண்டர்போ லாருமில்லை
மானான அம்பாளி னருளினாலே
 மகாகோடி யுகம்வரை தா னிருக்கலாமே. (106)

பவள பற்பம்.

இருக்கலா மின்னுமொரு போக்குக்கேளு
 என்மகனே பவளபற்பஞ் சொல்வேனப்பா
பொருக்கவே பவளமது பலந்தானையா
 புண்ணியனே நிம்பழத்தின் சாறுதன்னில்
கருத்துடனே ஊரவைத்து யேழாம்நாளில்
 கண்மணியே தானெடுத்துப் புடமேபோட்டு
மருமமில்லை மறுபடியும் பழச்சாற்றாலே
 மைந்தனே தானரைத்துப் புடமேபோடே. (107)
போடவே யிப்படியே முறைதானைந்து
 புடமதுவே தான்போட்டுப் பதனப்பண்ணு
நீடவே வெகுசுருக்கு யிந்தப்போக்கு
 நீனிலத்திற் பொய்யாது மைந்தாசொன்னேன்
வாடவே வேண்டாங்காண் அறிவுள்ளானே
 வையகத்தில் மானிடர்க்குச் சயரோகந்தான்
ஓடவே வழிபார்க்கு முண்மையாக
 ஓகோகோ வுந்தனுக்காய் வரைந்திட்டேனே. (108)

வெள்ளி வித்தை.

தானான என்குழந்தா யின்னுமொன்று
 சாற்றுவேன் வெகுசுருக்கு வெகுசுருக்கு
கோனான கணேசருட வாகனந்தான்
 கொற்றவனே மூஷிகத்தி னெலும்பைவாங்கி
வானான சுட்டசெம்பு தனையுருக்கி
 வளமையுட னெலும்பினால் கிளறுவாய்நீ
தேனான என்மகனே சொக்கமாகும்
 செகத்திலே வங்கத்திற் கேதுந்தானே, (109)

ஏகாமல்தானிருக்க வகைதான்சேளு
　　என்மகனே வெள்வங்க பற்பமீவாய்
போகாது வங்கமுதற் புடத்துக்குத்தான்
　　புண்ணியனே பொய்யாது மெய்யதாகும்
பாகான பாகமிது பாருளோர்க்குப்
　　பகராதே பத்திரமாய்ப் பாதுகார்ப்பாய்
சாகாமல் நீயிருந்து வித்தைபாரு
　　சடலத்தைப் போக்காதே வீணில்தானே. (110)

ஞானம்.

வீணிலே போக்காதே விண்ணைப்பாரு
　　மேவிநின்ற ஆத்தாளின் பதிதானங்கே
ஊணியே உற்றுப்பார் பத்துதீக்ஷை
　　யொன்ருகிப் போகுமல்லோ நாட்டந்தானே
வாணியுட பாலுண்டு வையகத்தில்
　　வளர்த்திடுவா யாயுளோ நீவளமையாக
ஏணியென்ற வாசியை நீ பாய்ச்சிப்பாரு
　　என்னசொல்வேன் சோதிமயங் காணுந்தானே. ()

சோதியதிற் சொக்கிடுவாய் சொரூபரூபம்
　　தோன்றுமே வாசியென்ற மனதினுலே
சாதிபேதம் வையாதே தரணிமீது
　　சாற்றுவேன் மனந்தானே சிவந்தானையா
ஆதியென்ற ரவிமதியு மனத்திறுலே
　　அரகரா வெண்சாரை மனத்திறுலே
பாதிமதி சடையணிந்த தம்பிரானும்
　　பரிவாக உன்னுள்ளே நோக்கிப்பாரே. (112)

பாரப்பா உன்னுள்ளே சோதியொன்று
　　பகர்ந்தாரே முச்சுடராய் மனத்திறுலே
சீரப்பா அரியயஞ ராஞரென்று
　　செப்பிஞர் சகக்கியானி செவ்வையாக
நேரப்பா அதைக்கண்டு சித்தரெல்லாம்
　　நேர்த்தியுடன் பாடிவைத்தார் நீனிலத்தில்
கூரப்பா கொட்டிவிட்டார் கோளாருகக்
　　கொற்றவனே தீர்த்தமென்றுங் கோவிலென்றே. ()

கொற்றவனே வானருட சாத்திரத்தைக்
கோருதே மனமதுவே மாய்கைசிக்கும்
எற்றிசையில் நாதாக்கள் பாடிவைத்த
ஏடதனைக் கைவிடா துற்றுப்பாரு
நற்றவத்தோர் தனையடுத்து நயங்கள்பேசி
நாயகனே யவர்களுக்குத் தொண்டுசெய்து
அற்றவரே நூலினுட வுளவைக்கூறி
அக்கரை கறையேற வழிசொல்வீரே. (114)

சொல்லுவீ ரென்று நீ யவரைக்கேட்டால்
சொல்லுவார் நூலினுட வுளவையாவும்
கல்லுவாய் ஞானமென்ற பாதைதன்னைக்
கண்மணியே யான்சொன்ன வாறுபோல
வெல்லுவாய் மாய்கைதனை விட்டேநீயும்
வேதாந்த பூரணத்திற் சொக்கித்தூங்கி
நல்லதொரு மெய்ஞ்ஞானி யாகிப்போவாய்
நாடதனி லுனைச்செயிக்க யாராலாமே. (115)

பொய்ஞானி.

ஆமடா உலகினிலே சாம்பற்பூசி
அப்பனே யுருத்திராட்ச மாலைபூண்டு
தாமடா பூங்காவி தன்னைப்பூண்டு
தற்பரன்போற் சடைபூண்டு குறடணிந்து
வாமடா பிரப்பங்கோற் கைப் பிடித்து
வளமான சாத்திரத்தைக் கையணிந்து
நாமடா நாதாந்தக் குருவேயென்று
நாடதனில் தான்மயக்கக் கூறுவாரே. (116)

கூறுவார் சாத்திரத்தின் பாடலெல்லாம்
கொற்றவனே நூலினுட வுளவைக்காணார்
வீறுடைய நூலையல்லோ பாடம்பண்ணி
விள்ளுவா ருளவதனைக் கண்டோன்போல
வாறுகே ளெனக்கென்ன தெரியுமென்பார்
வளமான வென்குசான் கிருபையென்பார்
தேறுவேன் மார்தட்டிக் கழுதையென்பார்
தெளிவான மெய்ஞ்ஞானி போற்சொல்வாரே. (117)

தெளிவான சுந்தரனே யெனவழைப்பார்
 தேசமதிற் சிக்காதே மாய்கைதன்னில்
வழிபோலச் சொல்வாரே சித்தன்போல
 வளம்பெரிய பூசைக்கு வரைதான்வேண்டும்
அளிப்பாயென் றுரைப்பாரே யன்பன்போல
 ஆகாகா வாய்ஞானம் பேசுவான்பார்
பழிக்காதே யென்னைப்போற் பெரியோர்தம்மைப்
 பாலகனே சாபமது யெய்துந்தானே. (118)

எய்புமே பத்திரமாய்த் தொண்டுபண்ணு
 என்மகனே யருள்தருவார் நமச்சிவாயம்
பொய்யாது என்வாக்கு யென்றுசொல்வான்
 புலையனல்லோ சிலகாலஞ் சென்றபின்பு
மெய்யான யென்மகனே யென்னவேண்டும்
 மேதினியி லுன்னைப்போல் தொண்டெனக்கு
செய்யார்க ளுலகிலே யென்றுசொல்லச்
 செப்புவான் பேராசை கொண்டுதானே. (119)

செப்புவான் பேராசை தன்னையூட்டிச்
 செப்பரிய வாதமதைச் செய்வேனென்பான்
தப்புகள்நான் செய்தாலும் பொறுப்பீரென்றுஞ்
 சமுசாரம் நானல்லோ பிழைக்கவென்றுங்
கப்பியதோர் பசியாலே கேட்குமூடன்
 கழறுவான் குடிகெடுக்கும் சங்கமன்றான்
அப்படியே யென்மகனே தருகுவேனுன்
 அப்போதே யரைப்பலந்தான் ரசமீவாயே. (120)

ஈவாயென் றுரைக்கையிலே மூடசீஷன்
 எழுந்திருந்து அரைநொடியில் ரசமேதந்து
தேவாநான் கொண்டுவந்தேன் பெற்றுக்கொள்வீர்
 தெளிவுள்ள யென்னுசா னென்னவேண்டும்
ஏவான யேவலது புரிவீரென்று
 என்சொல்வேன் சீடனவன் வினவும்போது
கோவான பொய்ஞ்ஞானி பெற்றபிள்ளை
 கூறுவான் வேஷகுரு சொல்லக்கேளே. (121)

கேளடா யென்சீடா ஒன்றும்வேண்டாம்
ஒட்டயிரு காட்டுகின்றேன் வாதவித்தை
நாளடா போக்காது நிமிஷந்தன்னில்
நாயகனே யென்றுசொல்லி மெழுகெடுப்பாய்
கேளடா பொய்க்குருக்கள் சொல்லும்போது
கொப்பெனவே தானெழுந்து மெழுகையீய
வாளடா மூசையிலே ரசத்தைவைத்து
வளமையாய்த் தானுருக்கி மெழுகைத்தானே. ()

மெழுகீய்ந்த பின்பல்லோ ரசந்தானையா
மேன்மையுள்ள பிறவியென்ற தங்கமாச்சு
கழுதையென்ற பொய்வேஷந் தரித்தகாமி
கழறுவான் ஒருவருக்குங் காட்டிடாதே
பழுதான வித்தையிது இந்தப்போக்கு
பாலகனே தானறியா மூடச்சீடன்
வழுத்துவான் குருமுடிக்க என்னவேண்டும்
வழங்குவீ ரெனவுரைப்பான் சீஷன்றானே. (123)

தானான சீஷனவன் கேட்கும்போது
தயங்காதே குருமுடிக்கப் பொருள்தான்வேண்டும்
கோனான குருபரனுங் கழுதையப்பா
கூறவே சீஷனவன் பொருள்தான்கொட்ட
வேனான யென்மகனே மூலிதன்னைத்
தேடுவோ மென்றல்லோ தெரியாமற்றுன்
கானான காடடைந்து வேஷம்நீக்கிக்
களைந்திடுவான் தாடிமீசை யெல்லாந்தானே. ()

மீசைமுதல் ரோமமெல்லாம் மடித்துவிட்டு
மீள்வானே மறுதேசம் போய்மயக்க
ஆசைவைத்து யிப்படியே யலைவான்பாவி
அப்பனே யவர்களிடஞ் சேராதேநில்
பாசையது வேறாகப் பேசுவான்பார்
பணம்பறிக்கத் தங்கசத்து மெழுகிலேற்றி
காசையிலே கைப்பிட்டாய்ப் பிழைப்பானல்லால்
கண்மணியே கதியில்லை நாகந்தானே. (125)

மெய்ஞ்ஞானி.

கண்மணியே யவர்களிடம் யேமாருதே
 கண்டுன்னை யடைந்தாக்கால் தூரமாய்நில்
விண்மணியே மெய்ஞ்ஞானி வருவாருண்டு
 விள்ளுவேன் வரும்போது மகிமைதன்னை
மண்ணிலே பட்டமரந் துளிர்த்துப்போகும்
 மகத்தான பிரம்மநிலை கண்டமேலாம்
பண்ணவர்கள் கூறவொண்ணு மகிமையப்பா
 பார்த்திபனே யவர்தேக மின்னுந்தானே. (126)

மின்னுமே பித்தரைப்போல் திரிவாரப்பா
 மேதினியில் நின்றேடே பேசார்பாரு
பன்னுவேன் நீயடுத்தால் கல்லினாலே
 பாய்ச்சுவா ருன்மேலே பித்தரைப்போல்
உன்னுவாய் கருவாளி யானால் நீயும்
 உகந்துகொள்வா யவர்மகிமை தன்னையப்பா
இன்னிலத்தில் கருவாளி காண்பானல்லால்
 இணைககமில்லாக் கருமியவர் காணார்பாரே. (127)

காணுரே தன்னிலையில் நிற்பாரையா
 கண்மணியே யவரைக்கண்டால் விட்டிடாதே
தோணுரே மாய்கையினால் மறைந்துகாண்பார்
 தொல்லுலகில் திலதமிட்டுக் கண்டுகொள்ளு
ஊணுண ஆணுறக்க மற்றஞானி
 உத்தமனே யவர்பதத்தைத் தொண்டுபண்ணி
ஞானமற் கதிபெறவே வழியைக்கேட்டால்
 நவிலுவார் மனமுவந்து நாதர்தாமே. (128)

மறைப்புமை.

தாமடா மறைப்புமை சொல்லக்கேளு தகமையுள்ள யென்சீஷா தயவுள்ளானே, நாமடா நிழல்வணங்கித் திகைப்பூடப்பா நன்மையுள்ள கழற்பூச்சி தொட்டால் வாடி, ஆமடா பிரம்மராக் காசியோடு அப்பனே பேய்மிரட்டி நாய்வணங்கி,பாமடா கருப்பூனைக்கண் ணும்பித்தும் பருந்தினுட பித்தோடு ஆந்தைப்பித்தும், காமடா காடையுட பித்துங்கூட்டு கண்மணியே செம்போத்துப் பித்துங்கூட்டே. (129)

கூட்டடா வால்நீண்டான் பித்துங்கூட்டு
குணமான அண்டைக்கலத்தின் பித்துங்கூட்டு
நாட்டடா கருநாயின் பித்துங்கூட்டு
நயமான கருங்கோழிப் பித்துங்கூட்டு
வாட்டமின்றிக் கௌதாரிப பித்துங்கூட்டு
வளமான காக்கையென்ற அண்டங்காக்கை
தாட்டிகமா யதனுடைய பித்துங்கூட்டு
தன்மையுடன் ஊமத்தன் கருப்புமாமே. (130)

மத்தனுடன் கருநொச்சி கருங்கையான்றன் மகத்தான மயக்கிவேர் கருவேம்போடு, இத்தகைய சரக்கெல்லா மொன்றாய்ச்சேர்த்து என்மகனே யேறழிஞ்சித் தயிலத்தாலே, சித்திபெறத் தானரைப்பாய் மைபோலாகச் சின்மயனே கஸ்தூரி புழுகிறோடு, பத்கியதாய்ப் பச்சைக் கற்பூரமப்பா பகருகிறேன் கோரோசனைக் குங்குமப்பூ, மத்தித்துச் சிமிழதனிற் பதனம்பண்ணி மனோன்மணிக்குப் பூசைநை வேத்தியஞ்செய்யே. (131)

பூசைசெய்து லாடமதி லணிந்துகொண்டு
புண்ணியனே நீயேக மறைப்போயாகும்
காசையிலே கள்ளரடா வனேகப்பேர்கள்
கழறுவே னவர்கண்ணிற் புலப்படாதே
நேசமது செய்வதற்கு வருவார்கோடி
நீமகனே திலதமிட்டு ஏகுவாய்பார்
ஆசைவைத்து யாருக்குஞ் சொல்லிடாதே
ஆகாகா இதுவென்ன மகிமைநன்றே (132)

வெள்வங்க வட்டை.

நன்றான யின்னுமொரு போக்குச்சொல்வேன்
நாயகனே வெள்வங்க வட்டைகேளு
குன்றான கோடாசுழி யிலையரைத்துக்
கொற்றவனே வங்கத்திற் கவசஞ்செய்து
பன்றான புடமதுதான் எருவேபத்து
பாலகனே புடம்போட வட்டையாகும்
நன்றான வட்டையதைப் பதனப்பண்ணு
நாடதனிற் காட்டாதே கருமிகட்கே. (133)

வங்கச் செந்தூரம்.

காட்டாதே வட்டையை நீ சட்டி தன்னில்
கருத்துள்ளாய் மூச்சாம லெரிக்கும்போது
தாட்டிகமாய் கிளறவேரு சுங்கன்வேரு
தகைமையுடன் கத்தையதாய்க் கட்டிக்கொண்டு
வாட்டமின்றித் தான்கிளறச் செந்தூரந்தான்
வளமையுட னுட்டிரத்தம் போலேகாணும்
நாட்டமுடன் செந்தூரந் தனையெடுத்து
நாட்டடா மதிமேலே பத்துக்கொன்றே. (134)

மதிமேலே யீந்தாக்கால் வயதோயெட்டு
மைந்தனே சீவனத்தைச் செய்துகொண்டு
விதியதனை வெல்வாயே விண்ணிலேலே
விள்ளாதே சாத்திரத்தை வாய்ந்துபாரு
சதியான மேகவலை சிக்கிடாதே
தற்பரனுங் குருபதத்தைத் தொண்டுபண்ணு
கதிபெறவே யுலகினிலே ஆசானைப்பார்
கண்மணியே முனியாவாய் சித்தாவாயே. (135)

வெள்வங்க நீர்வாங்க.

முனியாவா யின்னுமொரு வயனங்கேளு
முனையான நிலாவிரையோ டெட்டியோடு
சனிவான யிலையதனைக் குடுவையில்வை
கருத்துள்ளாய் வெள்வங்கம் ரூபாய்தூக்கம்
இனிமையுடன் தான்வைத்து இலைமேற்போடு
என்னசொல்வே னென்மகனே வேதைதன்னை
வனிமையுட னிப்படியே தூக்கம்மூன்று
வளமபெறவே வங்கத்துக் கீழ்மேற்செய்யே. (136)

செய்துமே யிருபதுகா னொருவிலையா
செய்பாக மாகவல்லோ புடமேயோடு
நையவே நீமேகிச் சுத்தமாகும்
நானிலத்தில் என்னசொல்வேன் வெகுசுருக்கு
பய்யவே யெடுத்துவிளை யாடுவாய் நீ
பாருலகிற் கழுருதே மகிமைதன்னை
உய்யவே உந்தனுக்காய்ச் சொன்னேனல்லால்
உத்தமனே கருமிகட்கு வீண்மேன்றானே. (137)

வகார வித்தை.

விள்ளவே கருமான மொன்றுகேளு
விண்ணவனே பாஷாணம் ரசம்வெண்காரம்
மெள்ளவே சீமைச்சுண்ண மிவையெல்லாந்தான்
மேன்மைபெற எடையதுதான் ரூபாயாகும்
கள்ளமில்லை வாழையென்ற பழத்தினாலே
கண்ணே நீ யரைத்துமே குடுவையில்வை
வள்ளலே யப்ரேகம் வாய்மேல்வைத்து
வழக்கமா யதன்மேலே செப்பைவையே. (138)

செம்பதுவும் அரைரூபாய்த் தூக்கம்தூக்கி
சேயேகேள் தகடாக்கி வைப்பாயப்பா
நம்படா அதன்மேலே ஓடுவைத்து
நாயகனே சீலைசெய்து புடமேபோடு
வம்பில்லை யிருபதுதா னெருவிற்போட்டு
வாகாகச் செய்பதனைப் பதனம்பண்ணு
உம்பர்கள்தா னறியார்கள் செப்புதன்னை
உத்தமனே வெருஞ்செப்பில் நாலுக்கொன்றே. ()

நாலுக்கு ஒன்றாக யீய்ந்தபின்பு
நாயகனே வெள்ளியது சரியாய்ச்சேர்த்து
பாலுக்கு உவமையல்லோ யிந்தப்போக்கு
பகருகிறேன் வெள்வங்கப் பற்பமீவாய்
மாலுக்குச் சமுசாரி செய்யும்வித்தை
மார்க்கமடா யிப்போக்கு போலவுண்டோ
வேலுக்கு நிகராவா யப்பா நீயும்
வெட்டவெளிப் பதிமேவி நில்லுநில்லே. (140)

நில்லுநீ சுயத்தங்கம் செய்வதற்கு
நீனிலத்தில் தாமிரத்தை யுருக்கியப்பா
வெல்லுவாய் வார்பூண்டு பிழிந்தாயானால்
வேதாந்தத் தங்கமது மாற்றேறாறு
நல்லதொரு ரிஷிமுனிவர் செய்யும்வேதை
நாட்டிலே சமுசாரிக் கொவ்வாதப்பா
இல்லறத்தோர்க் குரைக்கவில்லை துறவிக்கப்பா
எடுத்துரைத்தேன் விஞ்ஞைவித்தை வாதந்தானே.

வாதமது செய்வதற்கு யாராலாகும்
வகுத்தபிரான் றன்னருளா லாகுமேபோசொல்
பேதமது செய்துயல்லோ பிழைப்பார்பாரு
பேருலகில் சுயத்தங்கம் செய்வாரில்லை
வேதமது கற்றோன்போல் பேசுவான்பார்
வேதாந்தங் கடந்துநின்ற முனியோசெய்வான்
காதமது யில்லையடா வாதங்காணக்
கருத்துள்ளோன் நோக்கினால் வாதந்தானே. (142)

மலைமகிமைகூறல்.

தானேதா னிமையகிரி வடபாகத்தில்
சாற்றுவேன் அமலமலை யொன்றுஉண்டு
கானேதா னம்மலைக்கு மேற்பாகத்தில்
கழறுவேன் தங்கமலை யொன்றுகண்டாய்
நானேதான் போய்க்கண்டே னப்பாகேளு
நாதாக்கள் வெகுபேர்க ளங்கேயுண்டு
வானேதா னவர்களையுஞ் சுற்றிவந்து
வணங்கியே தொழுதிறைஞ்சி நின்றேன்காணே.

வணங்கியதோ ரெந்தனையா ரென்றுகேட்டார்
வளம்பெரிய வகத்தீசர் சீஷனென்றேன்
இணங்கியே யெந்தனையு மாசிகூறி
இருவென்றார் பொறுவென்றார் நாதரப்பா
கணப்போது அந்தரமாய்த் தலைகீழாகக்
கடுந்தவங்கள் செய்தாரே யென்னசொல்வேன்
பிணம்போலத் தானிருந்தார் சணநேரந்தான்
பேசினார் மறுபடியும் எந்தனோடே. (144)

பேசினார் பார்த்துக்கொண் டிருக்கும்போது
பேர்பெரிய சிங்கமது வந்ததங்கே
மாசிலாச் சித்தர்முன்பு வணங்கிநின்று
மகத்தான கர்ச்சனைகள் செய்ததப்பா
தேசியிலே யுனைச்சார்ந்த மிருகமெல்லாம்
திரண்டோடி வாச்செய்வீ ரெனவுரைத்தார்
வாசியைப்போல் பாய்ந்தல்லோ நரிகள்கூட்டம்
வாகான நரிக்கூட்டம் புலிதானுமே. (145)

புலிக்கூட்ட முதற்கொண்டு மிருகமெல்லாம்
புண்ணியனை யழைத்துவந்த திச்சிவிங்கி
கலியாண மிருகமெல்லாம் காவல்செய்யக்
கண்டேனே விநோதமதை யென்னசொல்வேன்
வலிதான பவமகற்றும் வள்ளலானோர்
வணங்கியதோ ரென்னையுமே யழைத்துக்கொண்டு
சலியாது அடவிசென்று வெகுதூரந்தான்
சார்ந்தோமே யோர்மலையி லடியிற்றானே. (146)

மலையதிலே வோர்மூலி கண்டோமையா
மகத்தான மூலியிலே புட்பம்கண்டோம்
கலையான புட்பமது வெடித்துமல்லோ
கைலாய வாசரைப்போல் ரிடிவந்தார்பார்
அலையான கடல்போன்ற கருணையுள்ளோர்
ஆகாகா அவர்மகிமை யின்னுங்கேளு
வலையான பவக்கடலை யொழிக்கநாதன்
வளமான முடிமீதிற் சடைகண்டோமே. (147)

கண்டோமே மலர்போன்ற முகத்தையையா
கணக்கிடவோ முடியாது ஆயுள்தன்னை
சண்டமாருதம்போன்ற ரிடிதானேது
சாற்றுவார் யாரப்பா நீங்களென்று
அண்டியே தான்பணிந்து ஏதுசொல்வோம்
அப்பனே தங்கமலைச் சித்தரென்றும்
விண்டவுடன் எங்களுக்கு ஆசிகூறி
இருங்களென்று தானுரைத்தார் சொல்லக்கேளே.

கேளடா யெங்களுக்குத் தங்கமூலி
கெணிதமுடன் தானீய்ந்து பேசிச்சொன்னார்
நாளடா போக்காது புசித்தோமையா
நற்பாலா தேகமது தங்கமாச்சு
வாளடா ஞானவா னெங்களுக்கு
வுழுத்தினார் வெகுகருக்குப் பாதைதன்னை
கோளடா இம்மலையி லு வாக்குப்பொய்யா
கொற்றவனும் புட்பரிஷி சொன்னவாக்கே. (149)

வாக்கான புட்பரிஷி யாச்சிரமத்தில்
வாகான மூலிகைதான் மகிமைமெத்த
நாக்கமலத் தாயாரி னருளையுன்னி
நாடினே னவர்பதத்தை மிகவாயெண்ணி
காக்கையிலே யவரிடத்தில் விடைதான்பெற்றுக்
கண்மணியே தங்கமலை வந்துசேர்ந்து
பார்க்கையிலே தங்கமலைச் சித்தர்பாதம்
பணிந்துமே விடைபெற்று வந்தேன்தானே. (150)

வீரச் சுண்ணம்

வந்தேனே யின்னமொரு வயனங்கேளு
வழுத்துவேன் வீரசுண்ணந் தன்னையப்பா
சொந்தமாய்ப் பொடிமூலி யறைத்துநன்றாய்ச்
சொருசாக வீரத்திற் கேதுசெய்வாய்
கந்தனே கவசித்துப் புடமேபோடு
காட்டாதே பத்துப்பல மெருவேயாகும்
இந்தவகை செய்தாக்கால் நீறிப்போகும்
என்மகனே கடுங்காரச் சுண்ணந்தானே. (151)

ரசச் சுண்ணம்.

தானான சுண்ணமதைப் பதனம்பண்ணு
தயங்காதே ரசச்சுண்ணஞ் சொல்லக்கேளு
கோனான கொடிப்பூண்டைத் தானரைத்துக்
கொற்றவனே தொன்னைசெய்து ரசந்தானப்பா
தேனான அரைப்பலந்தான் வார்த்துமூடித்
தெளிவாக அகலிலிட்டுக் கவசித்தேதான்
மானான எழுசீலை வலுவாய்ச்செய்து
மைந்தனே பத்தெருவிற் புடந்தான்போடே. (152)

அப்பிரேகச் செந்தூரம்.

போடவே புடமாறி யெடுத்துப்பாரு
பொலிவான சுண்ணமது காரமெத்த
நீடவே யப்பிரேகச் செந்தூரங்கேள்
நீனிலத்தில் பிரமவேர்ச் சார்பிழிந்து
ஆடவே யப்பிரேக மூன்றுநாள்தான்
அப்பனே யூரவைத்துச் சொல்லக்கேளு
நாடவே மலைதாங்கி யிலையரைத்து
நவிலுவேன் கவசித்துப் புடந்தான்போடே. (153)

புடமதுதான் போட்டபின் னெடுத்துப்பாரு
புதுமையடா யப்பிரேகச் செந்தூரந்தான்
தடமான செந்தூரங் குங்குமப்பூ
தாரணியில் வாதாதத்துக் குறுதியாகும்
மடமான சிவபூசை மறந்திடாதே
மானிலத்தி லின்னமுண்டு சிடிகைவேதை
இடமான யிடம்பொருளே வல்தாண்வேண்டும்
இஷ்டமுள்ளோய் வாதமெல்லாங் கொட்டினேனே.

கொட்டினேன் மூலிகையைக் காணுதற்குச்
சோடிப்பாய் சொர்னவயிரவரின்பூசை
இட்டமுடன் பூசிக்க மூலியெல்லாம்
இதுயிதுவென் றறைவாரே வயிரமூர்த்தி
கட்டமது படவேண்டாங் கருத்தாயப்பா
கழறுவே னிவரைவிட்டா லாசான்வேண்டும்
மட்டியிடஞ் சேராதே மைந்தாசொன்னேன்
மகாகோடி வித்தையெல்லாங் கொட்டினேனே. ()

வித்தையிது வொருவருக்குங் காட்டிடாதே
விண்மணியே கண்மணியே விளம்பக்கேண்மோ
பத்தியுடன் நூலதனைப் பதனம்பண்ணு
பகராதே கருமியென்ற மாண்பருக்கு
எத்தனையோ நூல்சொன்னார் சித்தரெல்லாம்
என்னூற்போல் திறமாகச் சொல்லவில்லை
தத்துவா யம்பாளின் குளேயப்பா
நாதாந்தப் பேரொளியை நண்ணுவாயே. (156)

நண்ணுவா யடைந்தவரைக் காக்கவேண்டும்
நாடதனில் பொய்சொல்லா திருக்கவேண்டும்
எண்ணிவா யுலகெல்லாந் தன்னைப்போல
ஏழையை நீ காத்திடுவா யிணக்கமாக
விண்ணுலகோர் யாவருமே மெச்சுவார்கள்
வேதாந்தத் தாயினது அருளினாலே
கண்ணியமா யுலகினிலே புண்யவானாய்க்
கலக்கமற்றுத் திரிவாய்நீ யின்னுங்கேளே. (157)

மேகநாதக் குளிகை.

இன்னுங்கேள் கருமான மொன்றுசொல்வேன்
எளிதான சகலரோ கத்துக்கெல்லாம்
பொன்னவனே மேகநாதக் குளிகைகேளு
பொலிவான சையோக மிருத்ததாலே
வன்னியது மிகவாகு மாந்தருக்கு
வருகூடு தான்மிகவாய் மேகமுண்டாய்
கன்னியினால் நோய்பிறக்கும் மேகம்போக்கக்
காட்டுகிறேன் குளிகைசக் கரைதானுமே (158)

சக்கரைசுக் கேலமொடு மிளகுமாஞ்சில்
சாதிக்காய் பத்திரியுங் கிராம்புகோஷ்டம்
மிக்க அதி மதூரமுடன் அமுக்குருவும்
விதமான வால்மிளகு கசகசாவும்
தொக்கவகை பலமிரண்டு சட்டியிட்டுச்
சுருதியெனும் பாலிலிட்டுப் பாகாய்க்காய்ச்சி
பக்கமுள்ள மூன்சாத்தை யதிலேயிட்டுப்
பாகமா யிறுகுபதம் பார்த்துக்கொள்ளே (159)

பார்த்தெடுநீ சாராயந் தேனுமிட்டுப்
பதமாக வுத்தியள வாகச்செய்து
சாற்றிடுவா யொருகுளிகை கொடுத்துப்பாரு
சதுரத்தில் வகனமூதற் பேதிநிற்கும்
காற்றுநவ மூலத்திற் கிராணிநல்ல
கடிதான செறியாமை வாந்திநிற்கும்
போற்றியே தேகத்தைப் பார்த்துத்தாக்கு
புகலரிய யாகோபு புகன்றிட்டாரே. (160)

கூவென்ற சொற்கேட்டு நபிமாரெல்லாம்
குண்டலியைத் தானசைத்துத் தீன்தீனென்றார்
ஆவென்ற சொற்கேட்டு நபிமாரெல்லாம்
அசனுசனும் வேறல்ல நீநானென்று
மாவொன்று ரொட்டியொன்று யீய்ந்துநல்ல
மக்கத்திற் போயிருங்க ளென்றுசொல்ல
ஈயென்ற சொல்லோடு மக்கந்தன்னிற்
இருந்தனடா கோடிவரை சொன்னேன்பாரே. ( )

மெய்ஞ்ஞானம்.

சொன்னமொழி தவருத பூதானந்தர்
தொல்லையற்று நின்றதொரு மார்க்கமெல்லாம்
நன்னயமாய்க் கூறினு ரெந்தனுக்கு
நற்சீஷா யென்குருவுஞ் சொன்னவாக்கு
உன்னதமாம் பூவுலகிலையாகேளு
ஒருக்காலும் பொய்யாது ஞானமார்க்கம்
கன்னியமா யெந்தனுக்கா யுபதேசித்தார்
கண்மணியே யெட்டெட்டுச் சித்துதானே. (162)

சித்தான கருவிகர ணங்களெல்லாந்
தெளிவான மாந்திரீக யோகமார்க்கம்
முத்தான மைப்போக்கு வுளவுமார்க்கம்
முதலான வைத்தியநூ டன்னைச்சொன்னூர்
கத்தனைத்தா னறியும்வகை காணச்சொன்னூர்
கருவான மனோன்மணியாள் நிலையைச்சொன்னூர்
எத்திசையிற் பகைவரெல்லாம் நடுங்குமார்க்கம்
எளிதான சூக்குமத்தைக் காண்பித்தாரே. (163)

காண்பித்தார் முன்னமே யையாநானுங்
கருவறிா மூடர்கள்தன் மொழியைக்கேட்டு
மாண்பாகல்கா னலையுமந்த மார்க்கந்தனை
மண்டலத்திற் கண்மூடுஞ் செபங்கள்சொன்னூர்
வீண்காலங் கழித்தல்லோ விருதாவாக
விட்டுவிட்டுப் பிரட்டிஜெப மாலைதன்னை
காண்டுவிட்ட நபிமார்போ லட்சாலட்சங்
கணக்கான வுருவதனைச் செய்திட்டேனே. (164)

செய்தேனே கணேசருட பூசைசெய்தேன்
செயமான வாலைதனைப் பூசித்தேன்யான்
வைதேனே யறுமுகவர் தன்னைவேண்டி
வகையாக வயிரவர்தன் ஜெபத்தைச்செய்தேன்
கைதவமா யெண்ணியல்லோ காளிபூசை
கனமான குறளிகுட்டி சத்திபூசை
மெய்யென்று மாடனு ரிருளன்பூஜை
மேலான பூசையெல்லா முடித்தேனுனே. (165)

முடித்துமே பலனொன்றுங் காணவில்லை
யொருபொருளு மறியாமற் போனேனப்பா
கடித்துமே பற்களெல்லா முதிறவேதான்
கலங்கினேன் கண்ணீர்விட் டழுதேன்சேயே
நொடிப்பொழுதி லூரெல்லாந் திரிந்தலைந்தேன்
நோயுற்ற மனிதனைப்போ லேங்கிநின்றேன்
தடிபிடித்த பித்தர்களைப் போலேயையா
தற்பரனை யறிந்தகுரு வந்தார்தானே. (166)

தானான குருவவரை நமஸ்கரித்துத்
தரணிதனில் மூன்றுதரம் வலமாய்வந்தேன்
கோனான வென்குருவா மூர்த்திநாதர்
கோடான கோடிபொரு ளெனக்குயீய்ந்தார்
நானான மமதையதை யொழித்தேனையா
நலமாகப் பன்னிரண்டு வருடங்கார்த்தேன்
தேனான மனோன்மணியாள் நிலையைக்கண்டேன்
தெவிட்டாத தெள்ளமுத முண்டிட்டேனே. (167)

உண்டேனே மனதிற்கு டெய்வங்கண்டேன்
உற்றபொ விளிருக்குமிட மாராய்ந்தேதான்
கண்டேனே நிலவதனைக் கண்டுகொண்டேன்
காணாத கருவியெல்லா மென்னுக்குள்ளே
விண்டேனே யெட்டிரண்டு மறிந்துகொண்டேன்
வேதாந்த வெட்டவெளி யதனைக்கண்டேன்
சண்டமா ருதம்போல வாசிமார்க்கந்
தயங்காமல் நாதவிந்து கண்டேன்பாரே. (168)

பாரேதான் பன்னிரெண்டு வருடமையா
பாங்கான கற்குகைக் குள்ளிருந்தேன்
நேரேதான் மறுபடியு மெழுந்துவந்தேன்
நிலையான அகத்தீசர் தன்னைக்கண்டேன்
சேரவே எந்தனுக்கு உபதேசங்கள்
செப்பினா ரவாருளைப் பெற்றேனப்பா
ஊரேதான் திரிந்தலைந்து வருகும்போது
உண்மைபொரு ளறிந்தசண் முகத்தைத்தானே. ()

முகமான அறுமுகவர் தன்னைக்கண்டேன்
　　முடிவான பொருளெல்லாங் காணபித்தார்பார்
தகமையுள்ள நந்தீசர் தன்னைக்கண்டேன்
　　தன்மையுட னெந்தனுக்கு உபதேசித்தார்
சகமுழுதுஞ் சுற்றியே சித்தர்பாதம்
　　சங்கையற வேண்டுமெனத் தெரிசித்தேன்யான்
அகமகிழ்ந்து அரூபியென்ற சோதிபாதம்
　　அடைந்தேனே கொலுமேடை யதனில்தானே. ()

தானான கண்மணியே தயவுள்ளானே
　　தரணிதனில் பொய்க்குருக்கள் வருவார்கோடி
கோனான குருவென்று கூறிக்கொண்டு
　　கோடிபொரு ளறிந்தவன்போல் குணங்கெடுக்க
தேனான மனோன்மணியாள் பதிகண்டோன்போல்
　　தெவிட்டாத தெள்ளமுத முண்டோன்போல
தானான மமதையை யொழித்தோன்போலத்
　　தரணிதனி லுனைமயக்க வருவார்காணே. (171)

காணவே பொருளதனை யுபதேசிக்கக்
　　கருவான குருவென்று காட்டுவேன்பார்
தோணவே யுந்தனுட உள்வுபார்க்கும்
　　தோய்ந்தபொருள் யாவற்றுஞ் சுருட்டிக்கொண்டு
வேணபடி பொய்பேசி வெருட்டுவான்பார்
　　விருதாக யவர்களிட போகாதே
வீணான வீணருடன் சேர்ந்தாயானால்
　　விழலுக்குத் தானிரைத்த நீராவாயே. (172)

நீரான யெந்தனுட நூலைப்போலே
　　நேர்மையுட னெந்நூலுஞ் சொல்லவில்லை
போரான பதினெட்டுச் சித்தரெல்லாம்
　　பிரபலமாய்ப் பரிபாஷை யாகச்சொன்னார்
தோராத பேரெல்லா மெந்தனூலில்
　　தெளிவாகக் கண்டுகொள்வார் மார்க்கமெல்லாம்
ஓராறு யீராறு வரைதான்காண்பார்
　　ஓகோகோ யெந்தனுட நூலைக்கொள்ளே. (173)

வாசி.

கொள்ளவே வாசியது மார்க்கஞ்சொல்வேன்
குணமுள்ள குழந்தாய்நீ கேளுகேளு
விள்ளவே யுந்தனுக்காய்ச் சொல்வேனப்பா
விண்மணியே கண்மணியே சொல்லக்கேளு
மெள்ளவே சந்திரனார் கலையில்வாங்கி
மெதுவாகச் சூரியனார் கலையிற்றூக்கு
கள்ளமில்லா மனதையடா நோக்கிப்பாரு
கருவான கருவிளமே கலந்துசேரே. (174)

சேரென்று சொன்னதொரு அய்யா அய்யா
செயமான மனநாட்ட மெங்கேயையா
வாரென்று கேட்டதொரு யெந்தனுக்கு
வகைபெறவே காட்டுமையா வலமாய்வந்தேன்
கூறென்று கேட்டாயென் குழந்தாய்கேளு
கூறுகிறேன் பார்வையென்ற மனக்கண்ணுக்கும்
தேருகின்ற வென்சீடா செப்பக்கேளு
சிறந்தவுச்சி மேல்நோக்கிப் பார்த்திடாயே. (175)

பார்க்கையிலே சோதிமின்ன லங்கேகாணும்
பாங்கான செங்கலாய் நின்றபீடம்
தாக்கையிலே யரியானு மானுமங்கே
சார்பாக நின்றதொரு தேவரங்கே
நோக்கையிலே யண்டமங்கே பாமுமங்கே
நொடிநொடிக்கு மாத்தாளி னில்லதானங்கே
பார்க்கையிலே பகாரிய கருவியங்கே
பாலகனே யென்சொல்வே னுட்டந்தானே. (776)

ஆட்டமா மாட்டமதை யறிந்தோர்ஞானி
அரகரா வாத்தாளின் மகிமைமெத்த
பூட்டான பூட்டெல்லா மிதிலேதோயும்
புண்ணியனே கண்டறித்தோன் நாதனேயா
நாட்டமுள்ள சதாசிவத்தைக் காண்போருக்கு
நாயகனே பிறப்பிறப்பு மற்றுப்போச்சு
தாட்டிகமாய்க் கோடான கோடியுண்டு
தயாபரியைப் பூசித்து யிருக்கலாமே. (177)

யாகோபு ஊமையை வினவல்

இருக்கலா மென்றுசொன்ன குருவேயையா
　　எளிலாக யின்னமொரு விண்ணப்பந்தான்
தருக்கமாய்க் கேட்கிறே னென்றுசொல்லித்
　　தயாபரனே யெண்ணும லுளவைச்சொல்வீர்
செருக்கான ஊமையென்று லென்னவையா
　　செயம்பெறவே யெந்தனுக்குச் சொல்வீர்நாதா
கருக்கான யெழுத்ததனைக் காட்டியேதான்
　　கலங்காம லென்னை நீ தேற்றிடீரே. (178)

கலங்கியே கேட்டாக்கால் சித்தரெல்லாம்
　　கருவான ஊமையதைச் சொல்லமாட்டார்
துலங்குமந்த பதினெட்டுச் சித்தரையா
　　தொல்புவியிற் சொல்லாமல் மறைத்துவைத்தார்
இலங்குகின்ற யாகோபு சொன்னவாக்கு
　　எளிலான ஊமையதைச் சொல்வேன்கண்ணே
நலங்கிடைக்கும் ஊமையது மகாரந்தாண்டா
　　நலமுல்லா யினருக்கு உரைக்காதென்னே. (179)

எட்டிரண்டை வினவல்.

உரைத்ததொரு என்குருவே அய்யா அய்யா
　　உண்மையுள்ள எட்டிரண்டு மென்றுலென்ன
கரைத்தபுளி போலவல்லோ சொல்வேன்சேயே
　　கருவான அகாரமது எட்டதாகும்
திரைத்தபொருளானதொரு உகாரந்தாண்டா
　　நிலையான லக்கத்தில் ரெண்டதாகும்
வரைந்திட்டே னுந்தனுக்காய் மைந்தானுனும்
　　வகையறியா மடையருக்குக் காட்டிடாயே (180)

கணேசர் பூசை.

காட்டாதே யின்னமொரு சித்துசொல்வேன்
　　கண்மணியே கணேசருட பூசைமார்க்கம்
நாட்டமுடன் ஓம் அய்யும் கிலியுமென்று
　　நலமான சவ்வும்கண பதியேவாவா
பூட்டடா லட்சமுரு தன்னைப்போடு
　　பொருமையுள்ள கணேசரவர் சித்தியாவார்
தாட்சமலந் தன்னை நீ போற்றியல்லோ
　　தயாபரனை வணங்கிநன்றாய் வரத்தைக்கேளே. ()

கேட்கையிலே மூலத்தி லெழுந்தசோதி
கெதிபெறவே யுத்தனுக்கு வருள்செய்வார்பார்
நாட்டையிலே அவர்பதத்தை மறக்கவேண்டாம்
நாடுதனி லாடுகின்ற சித்தெட்டெட்டு
தாட்டிகமா யிவரருளா லாடலாகும்
தண்மையுள்ள சண்முகத்தின் மூத்தோனாலே
தாட்சிக்கு முன்வருகும் பிள்ளையையா
தப்பாது அவர்பெருமை மெத்தவுண்டே. (182)

உண்டான கணேசருட் பூசைமார்க்கம்
ஓகோகோ நாதாக்கள் மறைத்துச்சொன்னார்
கண்டேனே கண்டபடி சொன்னேன்மைந்தா,
கருவாகக் கண்டல்லோ சொக்கிப்பாரு
தண்டான யந்திரத்தின் வகைதான்சொல்வேன்
தளராதே யறுகோணந் தன்னைப்போடு
செண்டான வரைதோறுஞ் சூலம்போடு
செயலாக உச்சியிலே சகாரம்போடே. (183)

போடேநீ மறுவரையில் ரகாரம்போடு
பொங்கமுட னதன்பிறகு அகாரம்போடு
நாடேநீ சொல்லுகிறே னன்பனென்று
நாதாந்தப் பேரொளியின் யந்திரத்தை
தோடமல தன்பிறகே ணகாரம்போடு
தெளிவாக வதன்பிந்தி பகாரம்போடு
சாடுகிறே னதன்பிறகு வகாரந்தாண்டா
சாங்கமுட னாறெழுத்தின் வகைதானச்சே. (184)

வகையான அறுகோண மத்திபிள்ளாய்
வண்மையுடன் பிரணவமாந் தன்னைப்போடு
தொகையான அம்இம்உம் மென்றுமாட்டு
தொல்லையற வசிவசி யென்றேபோடு
தகைமைபெற கங்கண பதியேயென்றும்
தளராமல் நமயென்று தன்னைப்போடு
சாமுழுது முன்பேரே யோங்குமப்பா
தப்பாது யந்திரத்தின் மகிமைதானே. (185)

தானான மந்திரமும் யந்திரந்தான்
தப்பாமற் கோர்வையதாய்ச் சொன்னேனையா
தேனான தெள்ளமுதே தெளிவாய்ச்சொன்னேன்
செயிப்பாயே நான்சொன்ன மார்க்கமாக
கானான கானகத்துச் சித்தரெல்லாம்
கண்மணியே கோர்வையதாய்ச் சொல்லவில்லை
நானேதான் விவரிக்க லானேனுன்னால்
நலமான மகாநைவேத்தியந்தானே. (186)

சிவசுப்பிரமணியர் பூசை.

நலமான யின்னமொரு சுத்தபூசை
நாயகனே யுந்தனுக்காய்ச் சொல்வேன்பாரு
தலமான ஏழுவரை நெடுக்கேபோடு
தப்பாமலேழுவரை குறுக்கேபோடு
திலமான வரைமுப்பத் தாறுமாச்சு
நிலையான வரைக்குள்ளே எழுத்தைக்கேளு
சலமான சரவணபவனே யென்று
சார்பான வெழுத்ததனைத் தாக்கிப்போடே. (187)

போட்டபின்பு இரண்டாவ தரையையப்பா
பொங்கமுடன் விடுத்தல்லோ மாறிப்போடு
நாட்டமுட னரைதோறு மெழுத்தைமாறு
நலங்கிடைக்கு மாறெழுத்தின் பெருமையாலே
தாட்டிகமாந் தனைத்தேட வேண்டுமென்றால்
தளராதே சரவண பவஓம்சவ்வும்
தாட்டிகமா யிவ்வெழுத்தை செபிப்பாயானால்
தன்மையுள்ள சண்முகத்தைத் தரிசிப்பாயே. (188)

வயிரவர் பூசை.

தரிசிப்பாய் விசுத்தியிலே கலந்துபாரு
தற்பரமாய் மூலத்தில் கணேசரைப்பார்
வரிசையுடன் வைரவனார் பூசைகேளு
வளமான வைங்கோணந் தன்னைப்போடு
கரிசையுடன் வரைதோறுஞ் சூலம்போடு
கண்மணியே நமசிவய வென்றுமாட்டு
பரிசையாய் மத்தியிலே பிரணவந்தான்
பாலகனே பிரணவமா மத்திகேளே. (189)

பிரணவமா மத்தியிற் சிவ்வென் றுபோடு
பிணங்காமல் செபிக்கின்ற மந்திரந்தான்
கரணமாம் ஓம் நரீம் ஸ்ரீம்கிரீம்வா
கருவான சுவர்ணபயி ரவனேவாவா
தரணமா மிந்தவகை யுருதான்லட்சம்
தயங்காமற் செபித்திடவே சித்தியாகும்
திரணமா யிவர்பெருமை சொல்லப்போமோ
செயமான வயிரவரின் றன்மைதானே. (190)

வாலை பூசை.

வயிரவரைப் பூசிக்கச் சுவர்ணந்தன்னை
வளமைபெறத் தருவாரே யுந்தனுக்குக்
கைதவமாய்ச் சொல்லிவிட்டே னிந்தசித்தைக்
கண்மணியே செபித்து நீ பாருபாரு
செய்தவமா யின்னுமொரு சித்துக்கேளு
செயலான வாலைமனோன் மணியாள்பூசை
வைரமதாய்ச் செய்கின்ற கோர்வையப்பா
வளமான ஓம்கிலியுஞ் சவ்வென்றுமே. (191)

ஆமேதான் ரீங்லீ வாவாவென்று
அடைவாக ஆக்ஞையிலே செபித்துப்போடு
நாமேதான் சொன்னபடி யம்பாளாட்டம்
நலமாகக் கண்கொண்டு பார்க்கமாட்டார்
போமேதான் செய்வினைகள் பறந்துபோச்சு
பொல்லாத நமனுரைச் செயிக்கலாகும்
தாமேதா னினைத்தபடி யெல்லாமாடும்
தகைமையுள்ள ஆத்தாளின் மகிமைதானே. (192)

மகிமையா மாத்தாளின் கிருபையாலே
மண்டலத்தில் வாதசித்தி யோகசித்தி
சகியாத ஞானசித்தி மாந்திரீகம்
தப்பாது யெட்டெட்டுஞ் சித்தியாகும்
திகிதமாய் நாட்டிவைத்த நூல்தானுகும்
நீணிலத்தி லீனருக்குக் காட்டிடாதே
லகிதமாய் மாண்பரையா கோடாகோடி
லக்கான பரிசனங்கள் வகாரப்போக்கே. (193)

வாதிகள் வரலாறு

போக்கான போக்கல்லோ குறுக்குப்போக்கு
புண்ணியனே கட்டலைந்தோர் கோடாகோடி
தாக்கியே நூல்பார்த்துப் பேசிக்கொண்டு
தன்மைபெற மூப்பூவை முடிப்போமென்பார்
சாக்காகச் சித்தராது நூலைச்செய்வார்
தப்பாத நூலதனி லுளவைக்காணார்
நோக்கியே சொல்லுகிறே னுந்தனுக்கு
நுணுக்கமுள்ள மூப்பூவின் வகைகாணாரே. (194)

காணாரே மூப்புவப்பு தன்னைக்காணார்
கருவறியா யீனரையா மட்டிமாண்பர்
தோணாரே குறுக்குவழி தனையுங்காணார்
தொல்புவியிற் துருசுக்குரு முடிப்போமென்பார்
நாணவே ரசக்கட்டுச் செய்வோமென்பார்
நலமான ரசமென்ற பொருளைக்காணார்
ஊணாரே துருசுவந்த வகையைக்காணார்
உலகினிலே கெட்டலைந்து போனார்மாடே. (195)

போனாரே மாடிழந்து கண்ணிழந்து
போரான கரியதனைச் சுட்டேகெட்டார்
தேனான உந்தனுக்கா யியம்புவேன்பார்
தெளிவான குறுக்குவழி வகாரப்போக்கு
கோனான என்குருவே ஐயாஐயா
கொற்றவரே விண்ணப்ப மையாஒன்று
மோனான மூப்புஅப்பு வென்றுலென்ன
மொழிந்ததொரு துருசினது வகைதான்கூறே. ()

வகையான வகையதனைக் கேட்டபிள்ளாய்
வளமைபெற உந்தனுக்காய்ச் சொன்னேன்பாரு
தொகையான நாதவிந்து மூப்புஅப்பு
சொரூபமாய் விளங்குகின்ற துருசேசோதி
நகையாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நலம்பெறவே உந்தனுக்கு விளங்கவேதான்
தகைமைபெற வாதத்தின் குறுக்குப்போக்கு
தன்மையுள்ள மைந்தாபின் சொல்லக்கேளே. ()

வங்கச் சுண்ணம்.

கேளடா வங்கத்தின் சுண்ணமார்க்கம்
கெலியான குமரியதைக் கொண்டுவந்து
நாளடா போக்காமல் தாரந்தானும்
நலமாகப் பலமொன்று தூக்கிக்கொள்ளு
வாளடா குமரியதைப் பிளந்துரெண்டாய்
வளமைபெறக் காரத்தின் பொடித்தூள்தூவி
கோளடா இல்லாமல் மூடிநன்றாய்க்
கொற்றவனே குழித்தயிலமிறக்கிக்கொள்ளே. ()

கொள்ளடா அவ்வெடைக்குத் தில்லைப்பால்தான்
குணமாக ரேசித்துக் கருவங்கந்தான்
வள்ளடா பலமொன்று தூக்கிக்கொண்டு
வளமாக முன்சொன்ன தைலத்தாலே
நள்ளடா சுருக்கதுவே நாலுசாமம்
நாயகனே தான்கொடுக்கச் சுண்ணமாகும்
கள்ளமடா யில்லையிது செம்பிற்றானும்
கருவாகப் பத்துக்கு மூன்றாமே. (199)

ரசிதப் போக்கு.

ஈயவே வயததுதா னென்பதாகும்
இயலான ரசிதத்தின் போக்குச்சொல்வேன்
நேயமாய்ச் சங்கென்ற பாஷாணந்தான்
நேர்மையாய்ப் பலமொன்று தூக்கிகொண்டு
காயமாம் ரசமதுவே ஒன்பதாகும்
கருவான வெடியுப்பு ஒன்பதாகும்
சாயமாம் இந்துப்புப் பலங்காலாகும்
சாங்கமுடன் சிற்றண்டக் கருவாலாட்டே. (200)

கருவான வெண்கருவா லாட்டிமைந்தா
கருவிளமே குயவனிடஞ் சென்றுநீதான்
திருவான பணவெடைதான் மூன்றுவட்டம்
தியங்காமற் செய்துவந்து தீராகேளு
குருவான கழஞ்சுஎடை ரசிதமப்பா
கொற்றவனே வாய்சரியாய்த் தகடடித்து
மருவான சரக்கெல்லா மொந்தையிற்றான்
மன்னவனே தான்போட்டுத் தகடுவையே. (201)

வைத்தபின்பு மேல்மூடிச் சீலைசெய்து
வளமான எட்டெருவிற் புடந்தான்போடு
இத்தகைய முறைபாடு செய்தபின்பு
இயலாக ஐந்துக்கு வொன்றுதாக்கு
கத்தனைப்போல் ரசிதமது வித்தையப்பா
கண்மணியே தாம்பிரந்தான் வெள்ளையாகும்
வைத்ததொரு பாகமெல்லாஞ் சொல்வேனையா
வளமான கெவுரியுட வேதைதானே. (202)

பஞ்சபாஷாணச் செந்தூரம்.

தானான பஞ்சபாஷாணப்போக்குத்
தகைமையுடன் சொல்லுகிறேன் உந்தனுக்காய்
தேனான தெள்ளமுதே காரீயந்தான்
தெரிவிப்பேன் கெவுரிவெண் காரத்தோடு
வானான சாதிலிங்கம் கெந்தியோடு
வகையான மனோசிலையாந் தன்னோடொக்க
கானான ரசத்தோடு யிவைகளெல்லாம்
கருவாக வகைக்குஒரு பலந்தான் தூக்கே. (203)

பலமான செருப்படைச் சாறுடொக்கப்
பாலகனே பழச்சாறு சமனுய்ச்சேர்த்து
நலமாகச் சரக்கெல்லாஞ் சேர்த்தரைத்து
நாயகனே அயடப்பி யதனிற்போட்டு
தலமாகச் சீலைமண் ணேழுஞ்செய்து
தப்பாது பத்தெருவிற் புடந்தான்போடு
நிலமான செந்தூரம் பவளம்போலாம்
நிஷ்களங்க மானதொரு வேதைதானே. (204)

வேதையா மதிமேலே முப்பதுக்கு
வேணபடி குருவொன்று தன்னையீயப்
பாதையாம் வயததுவு மெட்டதாகும்
பாலகனே நாலுக்கு ஒன்றுதங்கம்
சாதையாய் நீசேர்க்க யெட்டதாகும்
தப்பாது குருசொன்ன வாக்குமைந்தா
வேதையா மின்னுமொரு போக்குக்கேளு
வெளியான கருவங்க வெட்டைதானே. (205)

கருவங்க வேட்டை.

வெட்டையாம் காரீயந் தனைக்கொணர்ந்து
வகையாக யிலைகாட்டுத் தமட்டனையா
சட்டமுடன் தானரைத்து வங்கத்திற்குச்
சாங்கமுடன் கீழ்மேலும் பொதிந்துநன்றாய்
திட்டமாய் மேற்சொன்ன சாறுதன்னைத்
திறமாகக் குடுவையிலே வார்த்துமேதான்
நட்டமது வாராது சீலைசெய்து
நாயகனே பத்தெருவிற் புடந்தான்போடே. (206)

போடேதான் புடமைந்து போட்டாயானால்
பொங்கமுடன் கருவங்கம் வெட்டையாகும்
நீடேதான் மதிமூன்று செம்புநான்கு
நிஷ்களங்க மானதொரு குருவொன்றீய
வாடேதான் வகையாகச் சேர்த்தபின்பு
வளமாக ஐந்திற்கு ஒன்றுதங்கம்
சாடேதான் வயததுவு மெட்டேயாச்சு
தப்பாது சமுசாரிக் கானதாமே. (207)

வேறு கருவங்க வெட்டை.

தாமேதா னின்னுமொரு வெட்டைகேளு
தளராதே கருவங்கம் தன்னிலேதான்
நாமேதான் சொன்னநிலா வரைதானுகும்
நலமாகத் தானரைத்துக் கவசம்பூண்டு
ஈமேதான் பத்தெருவிற் புடந்தானையா
ஈரைந்து செம்புக்குக் குருவொன்றீய
ஆமேதான் சொன்னபடி சேர்த்துப்பின்னால்
ஆறுக்குத் தங்கந்தா னென்றுஈயே. (208)

ஈயவே வயததுவு மேழுமாகும்
ஈடான கோடிவித்தை யென்னசொல்வேன்
நேயமுட னிந்நூலைக் கைவிடாதே
நெருங்காதே யீனருக்குக் காட்டிடாதே
காயமாம் யான்சொல்லும் வேதையெல்லாம்
கண்டணியே தப்பாது கருக்கிப்பாரு
சாயமாம் உப்புச்செந் தூரந்தன்னைச்
சார்பாகச் சொல்லுகிறே னுந்தனுக்கே. (209)

உப்புச் செந்தூரம்.

சொல்லுகிறேன் செயநீரின் உப்புமைந்தா
சோங்காமற் கொண்டுவந்து கொழுந்துசீக்காய்
வெல்லுவாய் சாறதனு லாட்டிப்பின்னாய்
வெறுக்காதே யப்புஉப்பு ஒன்றேயாகும்
நல்லவே வில்லைதட்டிக் காயவைத்து
நலமாக ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
கல்லுவாய் ஏழெருவிற் புடந்தானையா
கருவாக வைம்பது புடந்தான்போடே. (210)

புடமான ஆறெருவிற் புடந்தானைந்து
புகழான செந்தூரம் பவளம்போலே
திடமான மதிமேலே பத்துக்கொன்று
திறமாகத் தானீய வயதுயெட்டு
தடமான தப்பரத்தின் மீதேயாகுந்
தயங்காதே தங்கம்ஒன்று கூடச்சேரு
மடமான மடமதனைக் கட்டிக்கொண்டு
மயங்காதே பாத்துக்கு அன்னம்போடே. (211)

தாளக பற்பம்.

பரமான யின்னுமொரு போக்குச்சொல்வேன்
பாங்கான தாளகத்தின் வகைதான்மைந்தா
வரமாகப் பலமொன்று தாளகந்தான்
வகையான ரசமிடைதான் ரூபாவாகும்
தரமான வெண்கார மிடையேரூபா
தளராதே நற்சங்கச் சாறுமைந்தா
திறமான நற்சங்கன் சாறேடொக்கத்
தியங்காதே வகைக்குவோ ருழக்குத்தானே. (212)

உழக்கான சரக்கெல்லா மொன்றாய்ச்சேர்த்து
உறுதியா யிருபத்து நாலுசாமம்
வழக்கமாய்ச் சாறுவிட் டாட்டிப்பின்பு
வகையாகத் தானுலர்த்தித் தூளதாக்கி
செழக்காகக் குப்பிதனி லடைத்துமைந்தா
செம்மையாய் எழுசீலை தன்னைச்செய்து
மூழக்குகிறேன் அடிகனத்த சட்டியுள்ளே
மூன்றுவிரல் மணலதனைப் பரப்பிடாயே. (213)

மணலதன்மேற் குப்பிவைத்துப் பற்பமாக்க
மயங்காதே மூடியபின் கழுத்துமட்டும்
சணப்பொழுதில் மணல்போட்டுச் சட்டிமூடித்
தயங்காதே கணபதியைப் பூசைசெய்து
கணக்காக அடுப்புமேல் சட்டிவைத்துக்
கண்மணியே சொல்லுகிறேன் கருத்தாய்க்கேளு
தணலான தணலதனை மூட்டுமார்க்கம்
தப்பாது ஒருசாமங் கமலந்தானே. (214)

கமலமா மக்கினியை மூட்டிப்பின்பு
கருத்தாகப் பதினொரு சாமமைந்தா
அமல்போலே காடாக்கினி தன்னைப்போலே
அடைவாகத் தானெரிக்க வேண்டுமையா
தமரவே வேண்டுமையா இரண்டுநாள்தான்
தப்பாது பற்பத்தின் பெருமைசொல்வேன்
நிமலனார் நீர்போலே பூக்குமப்பா
நிஷ்களங்க மானதொரு பற்பந்தானே. (215)

தானான மதிமேலே பத்துக்கொன்று
சார்பாகக் குருவதனையீய்ந்துபின்னால்
தேனான தங்கமது ஒன்றுகூட்டத்
தெவிட்டாத மாத்ததுதா னென்னசொல்வேன்
வானான வயததுவே யொன்பதாகும்
வகுத்துரைத்தே னுந்தனுக்கு யிந்தமார்க்கம்
மானான கண்மணியே மகியாகேளு
மாநிலத்தில் சீவனத்தைச் செய்துகொள்ளே. ()

தாம்பிர வேதை

கொள்ளே நீ சாத்திரத்தை யாராய்ந்தேதான்
குணமான மௌனமாந் தன்னிற்சேரு
தெள்ளமுத மானசிகா மணியேகேளு
தேசத்தில் சித்தரெல்லா மாடுமார்க்கம்
கள்ளமிலா துந்தனுக்குச் சொல்வேனப்பா
கனமான தாம்பிரமாம் வேதையாகும்
மெள்ளவே ரசமதனைச் சேர்தான்கொண்டு
மேன்மையுள்ள கருங்கையான் தன்னைவாங்கே. ()

வாங்கியே கருந்துளசி தன்னோடொக்க
வகையான கருப்பு ஊமத்தையப்பா
தாங்கவே மலைமுருங்கு கண்டங்கத்திரி
தப்பாது ஊமையென்ற பூண்டதாகும்
நாங்களுனு மமதையதை யடக்குமூலி
நலமான வில்வித்தோ டக்கிப்பூண்டு
ஓங்கிவளர் சோதியென்ற மூலியாகும்
ஓகோகோ நாதாக்கள் சொன்னவாறே. (218)

வாருகச் சொல்லுகிறே னப்பாகேளு
வளமான மலைதாங்கி வேரோடொக்கத்
தேருன நாய்வணங்கிக் காஞ்சோரிதான்
தெளிவான உத்தாமணி முருங்கையோடு
மாருகச் சொல்லவில்லை திகைப்பூடோடு
மன்னவனே சிறுசெருப் படைபூவல்லி
பேருன காட்டாமணி சிகப்பதாகும்
பெருமையுள்ள சிறுமூலி விஷ்ணுந்தானே. (219)

சிவமான பன்றியது தோண்டியப்பா
சிறப்பில்லா பீநாறி மூலியோடு
தவமான மாணிக்கப் பூண்டதாகும்
தளராதே யிவையெல்லா மரைத்து நன்ருய்
கவனமாய் ரசமதனை யுட்பொதிந்து
கண்மணியே கெசபுடந்தான் சதுரமாகும்
உவமையில்லா ரசங்கட்டிச் செந்தூரிக்கும்
உண்மையுள்ள செந்தூரப் போக்குக்கேளே. (220)

கேளப்பா செந்தூரந் தனையெடுத்துக்
கெடியான நவலோகந் தன்னிலேதான்
வாளப்பா சேருக்கு ஒருமாவீதம்
வகையாகத் தான்கொடுக்க மாற்றுக்கேளு
தாளப்பா வாயிரத் தெட்டுமாத்து
தயங்காதே யேமத்தின் சொரூபத்தாலே
நாளப்பா போக்காது நிலையில்நின்று
நாயகனே சித்துவிளை யாடுவாயே. (221)

ஆடவே யாரறிந்து செய்யப்போமுர்
அப்பனே சிவயோகி செய்வான்பாரு
நீடவே யோகிக்குக் கிட்டுமல்லால்
நீனிலத்தில் சமுசாரிக் கெட்டாதையா
வாடவே இரிகின்ற பேயருக்கு
வகையான யிவ்வேதை கிட்டாதப்பா
ஆடவே முன்சொன்ன வேதையெல்லாம்
அப்பனே சமுசாரிக் கெய்தும்பாரே. (222)

பாரே நீ வேதையிலே தங்கஞ்சேர்த்தால்
பாலகனே யவ்வேதை கிட்டுமையா
சீரேதான் தாயில்லாப் பிள்ளையுண்டோ
செகத்திலே செப்பார்க ளிம்மறைப்பை
தேரேதான் வயதுபத் தரைக்குமேலே
தெளியாது சமுசாரி யானபேர்க்கு
சாரே நீ சொல்லுகிறேன் சிடிகைவேதை
சாங்கமுடன் தாய்சேரு யேமந்தானே. (223)

உப்புமணிச் செந்தூரம்.

ஏமமாம் உப்புமணிச் செந்தூரங்கேள்
எளிலான ஆவாரம் பூவரைத்து
தாமதமில் லாமலே ரெண்டுபாத்திரம்
தயவாகத் தான்செய்து கரியுப்புவைத்து
நேமமாய்த் தான்மூடிச் சீலைசெய்து
நேர்மையுடன் புடமதுவே நூற்றியெட்டு
வாமமாய் ஐந்தெருவிற் புடந்தான்போடு
வப்பனே மறுபுடந்தான் சொல்லக்கேளே. (224)

சொல்லுவேன் ஆறெருவிற் புடந்தான்போடு
சோராமல் புடத்துக்கு யெருவொன்றேத்து
வெல்லுவா யிப்படியே நூற்றியெட்டு
விளம்பியதோ ரெருவரையி லேத்திப்போடு
கல்லவே செந்தூரம் பவளம்போலாம்
கருவான தாம்பரத்தின் மீதேதாக்கு
நல்லவே பத்துக்குக் குருவொன்றீய்ந்து
நிலமான தங்கமது ஒன்றுசேரே. (225)

சேர்க்கையிலே வயதுதா னென்னசொல்வேன்
சேர்வையடா யிருநான்கு மாற்றேயாச்சு
பார்க்கையிலே இவ்வேதை பசுமைமெத்த
பாலகனே வறுமையெனும் பிணியேபோச்சு
நார்க்கமலத் தாயாரி னருளினாலே
நாயகனே யுந்தனுக்குக் கூறலானேன்
மார்க்கமின்னுஞ் சொல்லுகின்றேன் மைந்தாகேளு
மானிலத்தோர் பிழைக்கும்வகை இதுதான்காணே.

லிங்கச் சேந்தூரம்

காணவே லிங்கச்செந் தூரங்கேளு
கருவான கண்மணியே கழறுவேன்யான்
தோணவே ஆதாளை வன்னியோடு
தொல்லையறச் சார்பிழிந்து படிஒன்றேகால்
வேணபடி அயக்குண்டா தன்னில்வார்த்து
வேடிக்கை கிருஷ்ணவின் அபிரேக்கையா
காணவே அதின்மீதில் வைத்துப்பின்பு
கருவான அதின்மத்தி லிங்கம்வையே. (227)

வையப்பா அடுப்பேற்றித் தீயைமூட்டி
வகையாக மாதளையாம் விறகினாலே
செய்யப்பா அக்கினிதான் கமலமாகும்
செயலாக மூன்றுநாள் யெரித்தபின்பு
பொய்யய்யா இல்லையடா சொன்னசாற்றால்
பொங்கமுடன் சுருக்கதுதா னொருனாகும்
மெய்யப்பா பேய்க்குமட்டி பழத்துள்வைத்து
மேன்மைபெற வாய்மூடிச் சொல்லக்கேளே (228)

கேளே நீ கரியதுதான் பத்துசேறு
கெடியான அணற்மூட்டி லிங்கம்வைப்பாய்
பாளேதான் விளுடியது பத்தேயாகும்
பாங்குபெறத் தாளெடுக்கச் செந்தூரந்தான்
காணே நீ பவளம்போல் சிவந்துகாணும்
கருவான ததையெடுத்து மதியின்மேலே
வாளே நீ பத்துக்கு ஒன்றுதாக்க
வயததுவும் பத்தாகும் வழிகாட்டாதே. (229)

குஷ்டத்திற்கு அவுஷதம்.

காட்டாதே வினைப்போக்கு மூலியப்பா
    கழறுவேன் கையானின் மூலியோடு
நீட்டுவேன் கருங்கையான் மூலியாகும்
    நீடான கொல்லியடா மலைவேம்போடு
ஊட்டுவேன் சிவனாரின் வேம்போடொக்க
    உகந்துகேள் நிலவேம்பு வெடிக்குஞ்சூரி
வாட்டமின்றி இவையெல்லா மொன்றாய்ச்சேர்த்து
    வாகாக யிருப்புலக்கை யதனாற்சாடே. (230)

சாடுவாய் ரசமதுவே நாழிவாங்கு
    சார்பாக எண்ணெய்தான் நாழிமூன்று
கூடுவாய் ரசமதுதான் சுண்டக்காய்ச்சு
    குணமுள்ளாய் பணவிடைதான் மண்டலங்கொள்
ஓடுமே குஷ்டமுதல் நோய்களெல்லாம்
    ஓகோகோ நாதாக்கள் மறைத்துச்சொன்னார்
சாடினேன் உந்தனுக்காய்த் தயங்காதே நீ
    தள்ளடா புளிபுகையும் உப்புந்தானே. (231)

உப்பான இவையெல்லாம் தள்ளினோர்க்கு
    உத்தமனே தேகமது காந்திமின்னும்
தப்பில்லை நாற்பதுநாள் பாலோடன்னம்
    சட்டமுட னுண்டாக்கால் குஷ்டமேது
ஒப்பில்லை எம்மருந்து மிதற்குவையா
    உத்தமனே யென்னசொல்வேன் மகிமைமெத்த
செப்பினேன் பத்தியந்தான் நன்றாய்க்காரு
    சேயெனே நீ யணுடியதாற் கூறினேனே. (232)

தங்க பற்பம்.

கூறினேன் வார்மூலி அரைத்துநன்றாய்
    கூசாமல் தங்கமதைத் தகடடித்து
வீறியனே தகட்டுமேற் கவசஞ்செய்து
    விளங்கவே மண்சீலை யொன்றேபோதும்
தேறுவாய் புடமதுதான் கெசமேயப்பா
    தெகட்டில்லை தங்கமது வெளுத்து நீறும்
சாறுவாய் பற்பமது வெண்மைமெத்த
    தளராதே பற்பமதைப் பதனம்பண்ணே. (233)

இரசக்குரு

ஆடப்பா பதங்கரசம் விராகனுக்கும்
ஆனதொரு கெந்தகமுஞ் சரியாயாட்டி
நீடப்பா மண்டுகங் கொண்டுவாய்க்குள்
நிறையாகச் சரக்குதனைப் போட்டுவைத்து
நாடப்பா கயிர்கோர்த்து உலர்த்திநன்றய்
நலமான குழிப்புடத்தில் தைலம்வாங்கி
போடப்பா சுத்திசெய்த தாம்பூரமெட்டு
புகழான சொக்கம்ரெண்டு விராகனுச்சே. (238)

ஆச்சப்பா உருக்குமுகந் தனையறிந்து
ஆகாகா தைலமதில் துளிதான்குத்து
போச்சப்பா பீடையென்ற தெல்லாமிப்போ
பொய்யல்ல மெய்யிதுதான் புகழ்ந்துகேளு
நீச்சப்பா சித்தர்சொன்ன சித்துமெத்த
நினைவாகச் செய்பாகங் கைபாகங்கள்
ஆச்சப்பா விள்ளாதே வயதெட்டாகும்
அருமையா மித்தொழில்தா னமுர்தஞ்சாத்தே. ()

சாத்தரிய பாஷாணங் கட்டியொன்று
தான்வாங்கிப் பீங்கானில் மூலைப்பாலிட்டு
போத்தரிய பொரிகாரம் விராகனென்று
பொடித்திட்டு வெண்கட்டி ரவியில்வைக்க
மாத்தரிய பால்குடிக்கு மிரட்டிநன்றய்
மைந்தனே யுணர்ந்தபின்பு வாங்கிக்கொண்டு
ஆத்தரிய விலாங்குமீன் பிடித்துவந்து
அதின்வாயிற் பாஷாணம் போட்டுத்தையே. (240)

தைத்தபின்பு உப்பிடித்து சட்டிதன்னில்
சரியாக அரையிட்டு அதிமேல்மீன்தான்
வைத்துமே உப்பிட்டு உலைதான்மூடி
வாய்சந்து சீலைசெய்து அடுப்பிலேற்றி
தைத்துகம லாக்கினியா யிரண்டுசாமம்
தானெரித்து பின்பு அதை ஆறவாங்கி
பத்திரும்புக் காண்டிதன்னில் பலந்தானிட்டுப்
பன்றிநெய்யி லரைப்படிதான் சுருக்குக்காட்டே. ()

பண்ணப்பா இன்னமொரு மார்க்கமையா
பகருகிறேன் புத்தியுடன் பண்பாய்க்கேளு
நண்ணப்பா தேசமெங்குஞ் சுற்றும்போது
நானேதான் கிஸ்கிந்தை நகரம்வந்தேன்
கண்ணப்பா மலையினடி வாரந்தன்னில்
கர்த்தராம் வீரமாமுனியைக் கண்டேன்
நண்ணப்பா கண்டவரை வலமாய்வந்து
நமஸ்கரித்தேன் நவச்சாரஞ் சொன்னார்கேளே. ()

நவச்சாரக் கட்டு.

கேளப்பா வொருபலந்தான் சீனிக்காரம்
கெடியான சரக்குபொரி காரமொன்று
ஆளப்பா மதமடக்கி நீரில்நேராய்
அரைத்துபலங் காலதுதான் நவச்சாரத்தில்
நீளப்பா பொதிந்துசித்திர மூலமாட்டு
நிலைமையாய்க் கவசமிட்டு சீலையைந்துசெய்து
நாளப்பா கோழிப்புடம் போடக்கட்டும்
நவச்சாரக் கட்டதிலே பலங்கால்வாங்கே. (235)

நவச்சார மெழுகு.

வாங்கியே வெடியுப்பு பலந்தானென்று
வளமான பழுப்பெருக்கஞ் சார்விட்டாட்டி
தாங்கியே ரவியில்சேர்த் துலரக்காட்டி
சட்டியிற் கோழிக்காரம் பரப்பித்தூளாய்
ஓங்கியே யதினடுவே யுப்பைவைத்து
உத்தமனே சிறுதீயா யெரிக்கமேலும்
தூங்கியே போகாமல் கோழிக்காரம்
சுகமான பொடிபோட மெழுகதாமே. (236)

ஆமப்பா கட்டினதோர் நவச்சாரந்தான்
அருமையிது கைகண்ட கட்டதாகும்
ஆமப்பா வொருக்காலுங் கசிந்திடாது
அக்கினியில் போட்டுப்பார் உருகியாடும்
ஆமப்பா அநேகவிதங் கட்டுமுண்மை
அவனிதனில் சொக்கமொரு பலத்துக்கேதான்
ஆமப்பா மஞ்சாடி மெழுகுபோட்டு
ஐயிரண்டு வயதுகண்டோம் ஆய்ந்துஆடே. (237)

இரசக்குரு

ஆடப்பா பதங்கரசம் விராகனுகும்
　　ஆனதொரு கெந்தகமுஞ் சரியாயாட்டி
நீடப்பா மண்டூகங் கொண்டுவாய்க்குள்
　　நிறையாகச் சரக்குதனைப் போட்டுவைத்து
நாடப்பா கயிர்கோர்த்து உலர்த்திநன்ருய்
　　நலமான குழிப்புடத்தில் தைலம்வாங்கி
போடப்பா சுத்திசெய்த தாம்பூரமெட்டு
　　புகழான சொக்கம்ரெண்டு விராகனுச்சே. (238)

ஆச்சப்பா உருக்குமுகந் தனையறிந்து
　　ஆகாகா தைலமதில் துளிதான்குத்து
போச்சப்பா பீடையென்ற தெல்லாமிப்போ
　　பொய்யல்ல மெய்யிதுதான் புகழ்ந்துகேளு
நீச்சப்பா சித்தர்சொன்ன சித்துமெத்த
　　நினைவாகச் செய்பாகங் கைபாகங்கள்
ஆச்சப்பா விள்ளாதே வயதெட்டாகும்
　　அருமையா மித்தொழில்தா னமூர்தஞ்சாத்தே. ()

சாத்தரிய பாஷாணக் கட்டியொன்று
　　தான்வாங்கிப் பீங்கானில் முலைப்பாலிட்டு
போத்தரிய பொரிகாரம் விராகனென்று
　　பொடித்திட்டு வெண்கட்டி ரவியில்வைக்க
மாத்தரிய பால்குடிக்கு மிரட்டிநன்ருய்
　　மைந்தனே யுணர்ந்தபின்பு வாங்கிக்கொண்டு
ஆத்தரிய விலாங்குமீன் பிடித்துவந்து
　　அதின்வாயிற் பாஷாணம் போட்டுத்தையே. (240)

தைத்தபின்பு உப்பிடித்து சட்டிதன்னில்
　　சரியாக அரையிட்டு அதிமேல்மீன்தான்
வைத்துமே உப்பிட்டு உலைதான்மூடி
　　வாய்சந்து சீலைசெய்து அடுப்பிலேற்றி
தைத்துகம லாக்கினியா யிரண்டுசாமம்
　　தானெரித்து பின்புஅதை ஆறவாங்கி
பத்திரும்புக் காண்டிதன்னில் பலந்தானிட்டுப்
　　பன்றிநெய்யி லரைப்படிதான் சுருக்குக்காட்டே. ()

காட்டியே வங்கபற்பங் களஞ்சியொன்று
கனமான கட்டிணபா ஷாணமொன்று
ஆட்டியே சுண்ணும்புச் சலத்தைவிட்டு
அன்வியொரு களஞ்சியென் வங்கங்காய்ச்சி
நீட்டியே உருக்குமுகத் திடவும்வாங்கும்
நேர்துருத்தி நாலுநா ழிகைதா னூது
வாட்டியே யெடுத்திதற்குச் சரியாய்ச்சூதம்
வளமான மேற்படி நீர் வார்த்தரைத்தே. (242)

அரைத்துவில்லை பிடித்துலர்த்தி வோட்டில்வைத்து
அதின்மேலுஞ் சில்லிட்டிச் சீலைசெய்து
வரைத்துநன்ருய் காடையொரு புடத்தைப்போடு
வாகாக யெடுத்திடவே மெழுகுமாகும்
உரைத்தசெம்பு சுத்திசெய்து நாற்களஞ்சி
உத்தமனே மண்சாடி வுருகும்போது
கரைத்திடுவா யொன்பதுக்கு வயதுமாறும்
காசினியில் ரத்தினநூ லிதுதானுச்சே. (243)

ரத்தினமாம் வீரமுனி சொன்னவாக்கை
நாயகனே யென்சீடா யாக்கோபென்று
சித்தான சித்தெல்லா மறிந்தவாசான்
சிற்பரன் பூதாநந்தர் திறமாய்ச்சொன்னுர்
மூத்தான் யென்சீடா உந்தனுக்காய்
முறையிட்டே னெந்தனுட னூலிலையா
எத்திசையில் நாதாக்கள் மறைப்பையெல்லாம்
எடுத்துரைத்தேன் கைபாக மிதுதான்பாரே. (244)

பாரேநீ என்தாசான் பூதர்போலப்
பக்குவமாய் ஞானவழி தன்னைச்சொல்வார்
யாருமே யவர்போலச் சொல்லவில்லை
அவனியிலே சித்தரெல்லா மறைப்பாய்ச்சொன்னுர்
தேருமே யவர்மொழியை யின்னஞ்சொல்வேன்
செகத்தினிலே ஞானவழி சிறப்பாய்ச்சொன்னுர்
காருமே யின்னூலைப் பதனம்பண்ணு
கண்மணியே காட்டாதே கழறுவேனே. (245)

ஞானங் கூறல்.

காட்டார்கள் ஞானமென்ற சூக்குமத்தை
கருத்தாகச் சொல்லுகிறேன் கண்ணேகேளு
பூட்டான யென்னுத்தா லிருக்குந்தானம்
புகழுகிறேன் புண்ணியனே கண்ணியாகே
நாட்டுகிறேன் பிறப்பிறப்பு மற்றுப்போக
நான்கூறும் வாறதனைக் கவனமாய்ப்பார்
தாட்டிகமாய்ச் சொல்லுகிறேன் தரணிமீது
தன்மையாய் யென்னைப்போ லார்சொல்வாரே.(246)

ஆருமே சொல்லார்க ளவனிமீது
ஆகாகா யென்னசொல்வேன் செப்பக்கேளு
பாருமே மூலமுத லாறுஸ்தானம்
பாங்குபெறச் செங்கனலாய் நின்றபீடம்
தேருமே யாகாயந் தன்னைக்காணு
தெவிட்டாத தாயாரின் பதியைக்காணு
கோருமே விற்புருவ மையமேல்நில்
கோடிபொரு ளீய்ந்தாலுஞ் செப்பிடாதே. (247)

செப்பாதே ரவிமதியைத் தெளிந்துபாரு
சிவாசிவா ஞானமென்ற மனதையூணு
தப்பாமல் காலாலே நிறுத்தியூது
தயங்காதே தற்பிரம சூட்சமேகேள்
ஒப்பமுடன் சந்திரனை யிறுத்திக்கும்பி
ஓகோகோ சூரியனில் மெள்ளவாங்கு
உப்பான அப்பதுவு மொடுங்கிற்றானால்
ஒருபொருளும் அழியாது உண்மைகேளே. (248)

கேளடா சூரியகலை யதனில்தாக்கு
கெடியாக நாற்பதுநாள் பழக்கம்பண்ணி
கோளடா யில்லாது சொன்னேன்சொன்னேன்
குறிப்பாகப் பழக்கமுத லானபின்பு
நாளடா போக்காது விண்ணைப்பாரு
நாயகனே மும்மூர்த்தி தேவரங்கே
யாளடா பரமங்கே காணுங்காணும்
பட்சமுடன் யென்னையழைக்குந் தாயாரங்கே. (249)

தாயான வஞ்சகர்த்தா ளாட்டமங்கே
தளராதே யெழுவகையின் தோற்றமங்கே
சேயான யென்னையா செப்பக்கேளு
செகமதிலே யாடுகின்ற சிவனுமங்கே
நாயாகத் திரியாதே நமசிவாயம்
நவிலுகிறே னைந்தெழுத்தின் பெருமைதன்னை
பேயாகத் திரியாதே பிரணவந்தான்
பேர்பெற்ற கணேசரவர் பீஜமாச்சே. (250)

ஆச்சப்பா நகாரமது பிர்மாவாகும்
அறியார்கள் மகாரந்தான் மாலேயாகும்
பேச்சப்பா சிகாரமது ருத்திரனாகும்
பேருலகில் வகாரந்தான் மயேசனாகும்
காச்சப்பா யகாரமது சதாசிவந்தான்
கழறாதே யாறுதல மிதுவேயாகும்
பாச்சப்பா பொய்பேசித் திரியாதே நீ
பாருலகில் கருவாளி காண்பானுமே. (251)

ஆமேதா னித்தகைய மார்க்கமெல்லாம்
அடுக்காகக் காண்பித்தேன் கண்டுகொள்ளு
நாமேதான் சொன்னபடி பூமையைத்தான்
நாயகமே கண்டோர்கள் புண்யவானாம்
தாமேதான் உப்புஅப்பைக் காணவேணுந்
தாட்டிகமாய்க் காணாத மடையருக்கு
வேமேதான் வாதமது கிடைக்குமோசொல்
வெட்டவெளி கண்டோர்க்குக் கிட்டுந்தானே. (252)

தானான ஞானிக்குப் பத்தியந்தான்
தடையறவே சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
தேனான பெண்ணினுட மோகமாகா
தெரிவிப்பேன் தூக்கமூதற் சோம்பலாகா
பானான வறுசுவையைத் தள்ளவேண்டும்
பாலகனே தானென்ற மமதைகூடா
மானான யென்னையா மகிழ்வாய்க்கேளு
மாறாதே மதியைவிட்டு யேகிடாதே. (253)

ஏகாதே மனமதுவே வாசியாகும்
　　எட்டாதே வெட்டவெளி மனதிலேதான்
போகாதே மனமதுவே யோகமாகும்
　　புகலுகிறேன் ஞானமது மனமேயாகும்
சாகாதே சந்தேகங் கொண்டிடாதே
　　சார்பான நற்பதவி மனதினாலே
வாகாகச் சொல்லுகிறேன் மனமேமந்திரம்
　　வகையறியா மானிடராங் கூட்டந்தானே. (254)

கூட்டியே மனமதுவே நில்லாவிட்டால்
　　குணமில்லை கருத்தை யொன்றாய்ச் சேர்க்கவேணும்
தாட்டிகமா யியம்பிவிட்டேன் மறைப்பையெல்லாம்
　　தாரணியி லென்னைப்போ லாருஞ்சொல்லார்
பூட்டான பூட்டெல்லா மிதிலேகாண்பாய்
　　புண்ணியனே சொல்லிவிட்டே னுளவையெல்லாம்
காட்டாதே யொருவருக்குங் கைபாகங்கள்
　　கண்மணியே யம்மையவள் கார்ப்பாள்தானே. (255)

சாபநிவர்த்தி கூறல்.

அம்பரத்தி லாடுகின்ற ஆத்தாள்பாதம்
　　அரகரா அர்ச்சித்து மூலிசாபம்
பம்பரம்போல் போக்குதற்குப் பக்கீர்யானும்
　　பகருவேன் குருவினுட கடாக்ஷத்தாலே
தும்புருவர் சித்தர்களுஞ் செப்பவில்லை
　　தொல்லுலகி லுந்தனுக்காய்ச் செப்புவேன்பார்
வெம்பியதோர் ரோகங்கள் நீங்கிப்போகும்
　　வேதாந்த மந்திரத்தின் மகிமைதானே. (256)

மந்திரத்தைச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
　　மகிழ்வாக மூலிவகைக் கெல்லாமொன்று
தந்திரமா மாதித்த வாரந்தன்னில்
　　தயாபரனே மூலியிட மேகியேதான்
சுந்தரனே வடமுகமாய் நின்றுகொண்டு
　　துன்பமறக் கணேசரை நீ தியானஞ்செய்து
வந்திப்பாய்ச் சூரியனில் மெள்ளவேதான்
　　வாசிதனைப் பாய்ச்சிடுவாய் கலைமாறுதே. (257)

மாருமல் சதாசிவத்தின் பதியிலநின்று
மாட்டுவாய் மனக்கண்ணால் நமசிவாயம்
வாருக வைத்துவிடு வரைகடோறும்
வகைபெறவே யுற்றுப்பார் மணங்கொண்டாப்போல்
தோருத மூலியடா சாபம்போச்சு
தோற்றுமடா நீநினைத்த சித்தெல்லாந்தான்
வீருன வீரியனே பஞ்சமுத்திரை
விருதுபெறத் தியானமதை மறந்திடாதே. (258)

மறவாதே சொன்னதெல்லாம் அய்யா அய்யா
மாட்டினூர் நவரத்தின மெந்தனுக்காய்
திறந்துமே யுளவதனைக் காட்டும்போது
திறமாகத் தர்க்கமது செய்துகேட்டேன்
இறந்துமே போகாத வழியைக்காண
இயம்பினூர் வழியோடே யெந்தனுக்கு
மறப்பான மானதமாம் பூசைமார்க்கம்
மாட்டுவாய் மனக்கண்ணால் மாறும்நோயே (259)

மாளுமே வியாதியெல்லாஞ் சொன்னேன்மைந்தா
மகத்தான சாத்மீகத் தோருக்கப்பா
கேளுமே பொய்சூது வில்லாமைந்தா
கேசரமாய் நிற்கின்ற வெழுத்தையெல்லாம்
வாளுபோல் வீசினூர் ஞானமார்க்கம்
வகையறியாச் சண்டாளர்க் கெய்துமோசொல்
தாளுமே பணிந்ததொரு யெந்தன்கண்ணே
சாற்றினேன் நவரத்தின சுருக்கமாமே. (260)

நவரத்தினங் கூறல்.

ஆமேதான் கண்நிறைந்த பூரணத்தால்
அாகரா வியாதியெல்லாம் நீங்கும் நீங்கும்
போமேதான் கண்மணியே மனக்கண்ணாலே
பூரித்து நேசித்தைந் தெழுத்தைநாட்டு
மாமேதான் கண்மணியே கும்பகத்தில்
மாட்டுவாய் மனக்கண்ணால் மாளும்வியாதி
காமேதான் கண்நிறைந்த பூரணத்தைக்
கண்டவுடன் வியாதியெல்லாம் பறக்கும்பாரே. ()

சீடன் கேட்குதல்.

பாரென்றீர் பூரணத்தை முன்னேமூர்த்தி
பார்க்கும்வகை யெப்படியோ பகரவேண்டும்
போவென்றுஞ் சொன்னீரே புண்ணியமூர்த்தி
போகும்வகை யெப்படியோ புகலவேண்டும்
மாறென்றுஞ் சொன்னீரே மவுனமூர்த்தி
மாற்றும்வகை யெப்படியோ மார்க்கஞ்சொல்வீர்
காறென்றுஞ் சொன்னீரே கம்பமூர்த்தி
காலடிக்கே நமஸ்காரங் காட்டுவீரே. (262)

குரு சொல்லுதல்

காட்டுவேன் கண்மணியே கலங்காதே நீ
கனகசபை பூரணத்தின் கருத்தாம்பார்வை
மாட்டுவாய் கண்மணியே நாதவிந்து
மகத்தான மூலத்தின் வட்டமிட்டு
நாட்டுவாய் கண்மணியே ஐந்தெழுத்தை
நானிலத்தில் மானிடர்க்கு நோய்கள்வந்தால்
ஓட்டுவாய் நசிமூல தேவாவென்று
ஓட்டையிலே ஓர்மனதா யோடும்பாரே. (263)

பார்வையென்றா லப்பாநெற் றிக்கண்பார்வை
பற்றற்றோர் பார்க்கின்ற பார்வையப்பா
சேர்வையென்றால் கண்மணியே ஞானச்சேர்வை
சினமற்றோர் செய்கின்ற சேர்வையப்பா
கோர்வையென்றால் கண்மணியே அண்டக்கோர்வை
கோர்த்தாக்கால் மணிகளெல்லாங் கொட்டுண்டே [போம்
பார்வையிலே கண்மணியே யண்டத்தேற்றிப்
பற்றியே பூரணத்தை மருவியேறே. (264)

ஏறுவாய் மூலத்தில் வட்டமிட்டு
யென்னசொல்வேன் சதுரத்தில் நகாரமிட்டு
தேறுவாய் மகாரத்தில் பிறையொன்றிட்டு
திட்டமாய் மூக்கோணத்தில் சிகாரமிட்டு
கூறுவாய் வகாரமிட்டு சட்கோணத்தில்
குறிப்பாக விந்துவிலே யகாரமிட்டு
சேறுவாய் நதிதனிலே தீர்த்தமாடிச்
சிவாசிவா பூரணத்திற் சொக்கித்தீரே. (265)

திர்க்கையிலே விண்ணரிலோங் காரமோது
திடமாகும் நாதவிந்து கோசபீஷம்
சேர்க்கையிலே உயிரெழுத்தைச் சேர்த்தூஓது
சிறந்தவன்னி வாய்வுநீர் மண்விண்ணோது
பார்க்கையிலே தியானத்தால் நாட்டம்பாரு
பாருலகி விதைவிடவே முட்டமில்லை
கார்க்கையிலே ஐந்தினையும் வேண்டிப்போற்றிக்
கைகண்ட பூரணத்திற் கலந்துநில்லே. (266)

நில்லுவுட லாவிபொருள் தத்தஞ்செய்து
நின்செயலே என்செயலோ வில்லையென்று
சொல்லுவாய் கண்மணிசாஷ் டாங்கஞ்செய்து
சோதிமணி மாத்திரைதான் சொக்கியீவாய்
வெல்லுவாய் பொய்களவு கொலைகட்காமம்
மேதினியி லுயிர்களைத்தன் னுயிர்போலெண்ணு
வல்லவனா யிருப்பதற்குச் சொல்லிவிட்டேன்
மதியினா லறிந்தந்த ஆதிபாரே. (267)

உபதேச அத்தமயம்.

ஆதியிலே அருவுருவாய் நின்றுளாத்தாள்
அரகரா கம்பவொளி யானுளம்மை
வீதியிலே சிவபாமு மானுள்கன்னி
வில்லொளியி லாகாய மானுள்வாலை
சோதியிலே காத்தனல்நீ ரானுள்சத்தி
சொரூபநிலை யானறிந்து சொல்லப்போமோ
சேதியிலே யிச்சேதி யாருஞ்சொல்வார்
தீட்சையைக் காப்பாற்றிநீ செய்துகொள்ளே. (268)

காப்பாரே யெங்குமொன்றாய்க் கியானியப்பா
கருத்தையொன்றாய்ச் சேர்ப்பாரே யோகியப்பா
சீப்பாரே கோழியைப்போல் மனதுள்ளப்பா
சின்மயமாய் வெளியில்நின்று சித்தமொன்றாய்
பார்ப்பாரே ஆரூட ஞானியப்பா
பளிங்கென்ற வாகாய மப்பால்சென்று
சேர்ப்பாரே ஆவியெங்கு மாகவப்பா
செங்கனலாய் நின்றவண்ட கொலுவில்தானே. ()

தானான கொலுவில் நின்று யோகமாகி
தன்மயமாய் வொளிசொரூப மானாரப்பா
தானான வொளிகொலுவில் மயமாய்ப்போனார்
தூங்காதே யம்மயமாய் நீயுமாவாய்
தேனான அவர்களுக்குப் பிறப்போயில்லை
தெவிட்டாத தெள்ளமுத முண்டதாலே
கோனான குருபதத்தில் தொண்டுசெய்து
கும்பிட்டு அந்தரங்கக் குறியில் நில்லே. (270)

நில்லப்பா மணியாடுங் கொலுவினுள்ளே
நிற்மலமாய் நின்றவரை யார்தான்காண்பார்
சொல்லப்பா வுந்தனுக்காய்ச் சொன்னமார்க்கம்
சுகமாக நல்லபிள்ளை யறியவேண்டும்
இல்லப்பா உன்வீட்டில இருக்கும்வஸ்து
இதையறியா மானிடர்க ளலைகிறார்கள்
வெல்லப்பா நாலுபிள்ளை வுண்டோன்சித்தான்
வெளியிட்டு வியாமதாய் விள்வேன்பாரே. (271)

பாரே நீ பிரிதி அப்பு தேய்வுசேரில்
பார்மகனே நாலுபிள்ளை யுண்டாச்சப்பா
ஊரே நீ திரிந்தலைந்து சிசுக்கள்தேடி
உரலதனில் போட்டிடிக்கா துண்மைசொன்னேன்
தேரே நீ நாலுபிள்ளை யறிந்துகொண்டு
தியங்காதே மர்மத்தைத் தெரியச்சொல்வேன்
ஏரே நீ நாலுபிள்ளை யறியவேண்டில்
யேகாந்தக் குருவதனை வணங்கிக்கேளே. (272)

சீடன் வினவல்.

கேளென்றீர் யென்குருவே சொல்லவேண்டும்
கிடைத்தபொருள் நீயிருக்க எங்கேபோவேன்
மேலென்றீர் என்குருவே யானந்தவாழ்வே
மேதினியி லும்மைவிட யாருங்காணேன்
கேளென்று எனக்குமிகச் சொன்னதாலே
கேட்டனையா யென்பேரில் பட்சம்வைத்து
வாளென்றீர் ஞானவா ளெனக்குத்தந்து
வழிகாட்டி உளவதனை வழங்குவீரே. (273)

சீடனுக்குக் கூறல்.

வீருன வீறியனே மெய்யுள்ளோனே
 விரித்துநீ கேட்டதினல் யானுஞ்சொல்வேன்
சீருன சின்மயனே யறிவுள்ளோனே
 சீக்கிரமாய் வன்னியிலே பிறந்ததொன்று
மாருன மாறலிது வறிந்துகொள்ளு
 மயங்காதே தேகசவுந் திரியுமப்பா
பேருன பேர்செய்யும் சமயமய்யா
 பிழைக்கவே இதையறிந்து பரிவாயேரே. (274)

ஏருமே நாலுபிள்ளை யொன்றுபட்டு
 யேகாந்த வெளிக்குள்ளே பதியைக்கண்டு
சேருமே மனதைநீ யலையொட்டாமல்
 செப்பினே னதையறிந்து தெளிந்துநில்லு
ஆருமே யிளப்பங்கே தோணுதப்பா
 அரகரா அதிபதியை யறிந்துகொண்டு
பாருமே யன்னையும்நீ பற்றிக்கொண்டு
 பரப்பிரமப் பூரணந்தான் பரிந்துகாரே. (275)

காராமல் போனதென்றால் பொய்யாய்ப்போச்சு
 கருத்தினிலே நோக்காட்டால் காணமாட்டாய்
சேராமல் போனதென்றால் இகலோகத்தில்
 செனனமப்பா செனனமப்பா தெரிந்துசேரு
போராமல் வொளிக்குள்ளே புகுந்தமானுர்
 பூவுலகில் பிறப்பிறப்பு இல்லையப்பா
பாராமல் வாசியைநீ பாய்ச்சிப்பாரு
 பாருலகில் செனனந்தான் பறந்துபோச்சே. (276)

போச்சப்பா ஆவியெங்கு மாகவப்பா
 போராட்டஞ் செய்யாதே காயமிங்கே
ஆச்சப்பா கருநெல்லி கற்பத்தாலே
 அரகரா வெண்சாரை அடைந்ததாலே
பாச்சப்பா ஞானக்கண் ணுனக்குத்தந்தேன்
 பாடிவைத்தேன் வேதாந்த ரகசியத்துள்
வீச்சப்பா ஞானவா ளெடுத்துநீயும்
 வீதிசுத்தி பஞ்சமுத்திரை தியானம்பாரே. (277)

சீடன் வினவல்.

பாரென்றுஞ் சொன்னீரே யாக்கோபையா
 பாருலகிற் றிரிந்தலைந்து உம்மைக்கண்டேன்
சேரென்று நீரெனக்கு வழியுஞ்சொல்லி
 செப்பினீர் கருநெல்லிச் சாரையென்று
ஊரென்றுங் காடென்றுந் திரிந்தாலுண்டோ
 உண்மைசொல்லு மலையேறிப் பார்த்தாலுண்டோ
தேரென்று யெனக்குநீர் சொல்வீரய்யா
 தேசிகரே பொன்னடிக்குத் தெண்டந்தானே ()

சீடனுக்குக் கூறல்.

தெண்டமென்று கேட்டதொரு பிள்ளாய்கேளு
 திறப்பேன்பார் நீலமணிக் கட்டைநன்றாய்
விண்டந்தான் கருநெல்லி கற்பமிங்கே
 விரித்தேன்பார் வெண்சாரை மனதில்கண்டாய்
அண்டபதி ரண்டமெல்லா மாடிநிற்கும்
 அரகரா கருநெல்லி வெண்சாரைகண்டாய்
உண்டறிந்தார் சித்தரெல்லா மிந்தக்கற்பம்
 உரைத்தேன்பார் உண்மையிது விண்ணில்சேரே. ()

விண்ணிலே யிருவிரலை வைத்துப்பார்பார்
 வேதாந்த முடியறிந்து வொளிகண்டோர்கள்
வன்னியிலே இருவிரலை வைத்துப்பார்பார்
 வழிரெண்டை வொன்றாக்கி வொளிகண்டோர்கள்
உன்னிலே ஆடுகின்ற பொருள்தானப்பா
 ஓகோகோ உலகமெல்லாம் ஒளிதான்கண்டாய்
தன்னிலையைத் தானறிந்தால் ஞானியாவான்
 சாகரத்தின் நிலையில்நின்று தாக்கிப்பாரே. (280)

தாக்கையிலே கனகசபை கோலங்காணும்
 தவளமென்று மின்னல்மின்னுந் தாரகத்தில்
காக்கையிலே ஆயிரத்தெட் டிதழின்நேரே
 கரகமலர் விரலைரெண்டும் மெதுவாய்விட்டு
நோக்கையிலே பளிச்சென்று மின்னல்மின்னும்
 நோகாமல் செகசோதி மணிசொரூபம்
பார்க்கையிலே பஞ்சவர்ணக் கோலங்காணும்
 பரப்பிரம சொரூபத்தில் பளிங்குகாரே. (281)

காரப்பா வன்னிக்குள் ளொளியினுட்டம்
கருத்தை யொன்றாய்ச் சேர்த்தல்லோ கண்டார்சித்
ஏரப்பா ஓர்மனதாய்ப் பிராணாயஞ்செய்து [தர்
ஏகவெளி யொளியின்மேல் நாதவோசை
ஆரப்பா விதையறிந்து நிற்கப்போறார்
அரகரா ஞானியல்லோ அறிந்துநிற்பான்
ஏரப்பா பூரணைத்தில் மனதையோட்டி
யேகவெளி தரிசனத்தை விளம்பினேனே. (282)

விளம்பினேன் தரிசனத்தை வெளிவிடாதே
வீணருடன் சேராதே விழலாய்ப்போகும்
தளம்பினே னென்றுரைத்த பிள்ளாய்கேளு
தட்டிவிடு யகாரஅவ்வ லகாரனைப்பற்றி
அளம்பினேன் மேருவினில் வைத்தேனப்பா
அரகரா பசியாளி யறிந்துவுண்பான்
களம்பினே னிக்கர்ப்பம் வுண்டுயானும்
கயிலையங் கிரிவொளியில் கலந்தேன்மூத்தி. (283)

மூத்தியாம் வொளிமயத்தில் சேர்ந்தோர்க்கெல்லாம்
முனிவர்சித்தர் இவ்வொளியில் கலந்துநின்றார்
சத்தியாம் வுகாரவிந்து கொலுவில்நின்றார்
சதாநாட்ட மதிலிருந்து சார்வுசொன்னேன்
வெத்தியாம் அகாரசிவம் விந்துசேர்த்து
வெளிவிட்டேன் வெளிமயத்தில் சேர்வாயப்பா
வத்தியாம் தீபவொளி சேர்ந்தால்மூத்தி
வாழ்த்துவாயின் னூலில் முடித்தேன்காணே. (284)

முடித்திட்டீர் பூரணப்பால் யெனக்களித்தீர்
மூத்திதரும் மார்க்கத்தை முழுதுஞ்சொன்னீர்
எடுத்திட்டீர் எனக்குச்சொல் ரசந்தானையா
என்னசொல்வேன் ஒருசேதி யிரங்கிச்சொல்வீர்
விடுத்திட்டீர் மறைத்ததெல்லாந் திறந்துசொன்னீர்
விபரமாய் உயிர்கொடுக்கும் வுளவைச்சொல்வீர்
தொடுத்திட்டீர் நவரத்தினம் நன்றாய்ச்சொன்னீர்
தோஷமில்லை உயிர்கொடுக்கும் நிலைசொல்வீரே. ()

சீடனுக்குக் கூறல்.

கூரேழு லோகமெங்கும் நிறைந்துவொன்றாய்
விநோதமுள்ள சஞ்சீவி மூளைத்துத்தானாய்
பாரேழு லோகமெங்கும் படர்ந்துதப்பா
பதியினிடம் பசுவாகி யிருந்துவுண்பாய்
சேரேழு மலைக்குமேல் நின்றாற்காணும்
செப்பினேன் சஞ்சீவி வேர்தானங்கே
வேரேழு லோகமெங்கும் பாய்ந்துதப்பா
வேதாந்த வொளியில்கலந் துண்ணுவுண்ணே. ()

உண்ணப்பா வுயிர்நிலைதான் கண்டுகொண்டு
வுற்றுப்பார் தசதீட்சை வொன்றாய்ப்போச்சு
பண்ணப்பா அந்தரங்க பூசைநன்றாய்ப்
பக்குவத்தோ டேயிருந்து பதியில்சேரு
அண்ணப்பா அங்கிருந்து விளைந்ததல்லால்
அரகரா அறியார்கள் வுலகத்தோர்கள்
கண்ணப்பா மேல்நோக்கி யோட்டிப்பாரு
கண்ணொளியை விண்ணொளியில் கலந்துயோடே. ()

போடுவாய் விஸ்வரூபம் பூரணதிரேகம்
பொருந்துவாய் யொளிக்குள்ளே நாதங்கேட்கும்
கூடுவாய் மணிநாதம் கேட்டுக்கொண்டேன்
குறிவொட்டி நாதவொளி சொக்கிப்பார்த்து
நாடுவாய் பரமங்கே காணுங்காண்பாய்
நாதமாம் வொளியில்சொக்கும் சிவந்தானப்பா
ஓடுவாய் சிவந்தாண்டி அண்டம்சேர்வாய்
ஓகோகோ மெய்ப்பொருள்தான் வோட்டிப்பாரே. ()

சீடன் வினவல்.

ஓட்டிமிகப் பாரென்று யாக்கோவையா
ஒருபொருளு மொளிக்காமல் வுண்மைசொன்னீர்
கூட்டிமிக விஸ்வரூபம் நன்றாய்ச்சொன்னீர்
குறியோட்டும் வுளவைமிகக் கூறிப்போட்டீர்
நாட்டிமிக நயனவொளி யறியச்சொன்னீர்
நாதமாம் சிவந்தாண்டி அண்டச்சேவை
காட்டிமிகச் சொன்னீரே குருவே அய்யா
கைவுள்ளங் கனிநெல்லி கண்டுஉண்ணே. (289)

உண்ணிமிகச் சொன்னீரென் குருவே அய்யா
வுற்றபொருள் யெனக்குரைத்தீர் வுண்மையாச்சு
பண்ணிமிகச் சொன்னீரே நூல்கடோறும்
பட்சம்வைத்து யென்மீதில் பண்பாய்ச்சொன்னீர்
சென்னிமிசை கரங்கூப்பித் தெண்டனிட்டேன்
செப்பினீர் என்னிடத்தி லிருக்குதென்றீர்
எண்ணிமிக யெனக்குநீர் சொல்வீரையா
என்னிடத்தி லிருந்தவொன்றை யெனக்குக்காட்டே.

சீடனுக்கு கூறல்.

காட்டென்று கேட்டபிள்ளாய் கேளுகேளு
கனகமணி மாடத்தில் காட்டுவேன்யான்
ஓட்டென்று வுனக்குமுன்னே சொன்னேனப்பா
ஒருமனதாய் மணியில்சேர்ந் துத்துப்பாரு
பூட்டென்ற பூட்டெல்லா மிதிலேகண்டாய்
புண்ணியனே நீயருந்து பொய்யோயில்லை
ஆட்டென்ற ஆட்டெல்லா மிதிலேசொல்வேன்
அழகுமணி மாடமதி லறிவிப்பேனே. (291)

அறிவிப்பேன் அறிவுள்ளாய் அறிந்துகொள்ளு
அப்பனே மாடத்தில் வொளிதான்கண்டாய்
விரிவிப்பேன் கருமணிதான் கண்டாயப்பா
விம்மணியில் நின்றிலங்கும் பரத்தைக்கண்டாய்
தெரிவிப்பேன் பத்துக்குள் சிவத்தைப்பாரு
தேசிகனே அவர்சிரசு அண்டமாச்சு
குறிவிப்பேன் இக்குறிதான் கெள்வாருண்டோ
குருமக்க ளானுக்கால் குறிகொள்வாரே. (292)

வாரெல்லாம் வழியாகச் சொன்னேனப்பா
வழியறியா வேஷகுரு வருவார்கோடி
கூரெல்லாங் குறியாமல் குளறுவார்கள்
குருமக்கள் நானெனவே கூறிக்கொண்டு
பாரெல்லாந் திரிந்தலைந்து பணம்பரிப்பார்
பாலகனே யவர்களிடஞ் சேராதேநில்
ஊரெல்லாந் திரிவார்கள் குருக்களென்று
வுண்மைபொருள் கேட்டாக்கால் பதுங்குவாரே. ()

பதுங்குவார் பாசாண்டி வேடத்தோர்கள்
பரதேசி நானெனவே வேடம்பூண்பார்
ஒதுங்குவார் ஓரெழுத்தின் பொருளைக்கேட்டால்
ஒருமொழியுஞ் சீராகச் சொல்லமாட்டார்
சுதுங்குவார் சிவசொரூபங் காட்டென்றுக்கால்
சுடுகாட்டுப் பிணம்போலே சொக்கிக்கொண்டு
வதுங்குவார் வந்தவழி தெரியவேதான்
வழியுரைத்தால் குருவெனவே வணங்கிநில்லே. ()

நில்லப்பா பெரியோர்கள் வருவாருண்டு
நின்றேடே பேசார்தன் நிலையில்நிற்பார்
செல்லப்பா அவரை நீ விட்டிடாதே
செப்புவார் யென்னூலில் மொழிந்தபாஷை
கல்லப்பா வாலுலுங் கறைந்துபோகும்
கண்டுகொள்ளு அவர்மனது கறையாதப்பா
சொல்லப்பா ஓர்சொல்லும் பொய்வராது
சொன்னுக்கால் ஆதியந்தஞ் சொல்வார்போற்றே.()

போற்றப்பா பித்தரைப்போல் திரிவார்ஞானி
பொய்க்குருக்க ளல்லமெய்க் குருவேயாகும்
ஆற்றப்பா வுன்மனது யவர்வாக்காலே
அதீதமாய் சொரூபமதில் அடைவாயப்பா
ஏற்றப்பா மணிவிளக்கு உள்ளேசென்று
யென்றைக்கு மவியாத விளக்கைக்கண்டு
சாற்றப்பா பூரணத்தைத் தெரிந்துகொள்ளு
சரிசொன்னேன் நீயதனில் கலந்துகொண்டே. ()

கொண்டங்கே நீயதனில் கலந்துபோற்று
கோடிமுப் பதுமூன்று தேவரங்கே
தொண்டரங்கே தொழுவங்கே பூசையங்கே
துரைராசர் அறுபதின்பேர் கொலுவினுள்ளே
பண்டங்கே பரனங்கே யயன்மாலங்கே
பலநூலும் போற்றுகின்ற பொருள்தானங்கே
அண்டரங்கே யட்சரங்க ளெல்லாமங்கே
அதீதமப்பா யானுனக்கு அரைந்திட்டேனே. ()

அறைந்திட்டே னிந்தநூ லதீதமப்பா
ஆரறியப் போரார்க ளவனியுள்ளே
திறந்திட்டே னுலகோர்க்கு வெளியதாக
திவ்யதச தீட்சையெல்லாந் தெரியநன்றாய்
சொறிந்திட்டேன் வாடாத புஷ்பமாக
சொர்ணகய வறிவுடைய பிள்ளைகட்காய்
வறைந்திட்டேன் வொளித்ததெல்லாம் வெளியதாக
வாதிவயித் தியர்கண்டால் வாழ்த்தும்நூலே. (298)

நூலேணி யிதுவல்லோ போவதற்கு
நுணுக்கமதாய்க் காலைவைத்து நுழைந்துயேறு
காலேணி சோலையிலே வைத்தேனப்பா
கண்டேறு அண்டம்ரெண்டுங் கொண்டுபோகும்
மேலேணி மூப்பாலுக் கப்பாலப்பா
மெய்ஞ்ஞானி யப்பாலுக் கப்பால் நிற்பார்
பாலேணி சித்தருக்கும் ஞானிக்காகும்
பாடினேன் குருவாக யின்னூல்தானே. (299)

அதீதமயம் 32 கூறல்.

தானேதா னறிவதற்கு வகையைக்கேளு
தட்டிவிடு யான்சொன்ன மார்க்கம்போல
தானேதா னியம்பிவிட்டேன் மார்க்கமாக
நாட்டப்பா வுன்மனதை சிவத்திறேடு
மானென்ற அதீதமய மூப்பத்திரண்டிற்கும்
மகிழ்வாக அதின்விபா சூட்சந்தன்னை
வானோர்க ளறிவார்க் ளெந்தநூலை
வழங்குகிறே னுந்தனுக்கா யாதியோற்றே. (300)

ஆதிபராஞ் சோதியா யமர்ந்தாளம்பாள்
அரகரா வம்பாளைப் போற்றிச்செய்து
சோதிபரம் பரையான சொரூபத்தாயை
சொலிக்குகின்ற ரூபியைத்தாள் தொழுதுபோற்று
நீதிபரம் பரையான மணியைக்கேளு
நீனிலத்தில் சாத்திரத்தில் மறைத்ததெல்லாம்
சேதிபரம் பரையாக நிலைக்கச்சொல்வாள்
திறமாக தேவிக்குக் காப்புக்கட்டே. (301)

காப்பிட்டுக் கர்த்தரைத்தான் தொழுதுபோற்றிக்
கனகசபை யுடையோரை நமஸ்கரித்து
கூப்பிட்டு வுலகோர்கள் பிரமைதீரக்
கூறுவேன் உபதேச சூட்சந்தன்னை
சாப்பிட்டு யிளைப்பாரி யிருங்களென்று
சமுசயங்கள் தீரநன்றாய்ச் சாற்றுவேன்கேள்
ஆப்பிட்ட தென்றுசொல்லித் தள்ளவேண்டாம்
அடுக்கடுக்காய் விபரமெல்லா மறைகுவேனே. (302)

அறைகிறே னுதிமுத லகாரந்தன்னை
அப்பனே அகாரமது சிவமதாச்சு
வறைகிறேன் நீமூல மப்பூவாச்சு
மகாப்பெரிய சூதாச மொன்றுமாச்சு
நிறைகிறேன் வாசிக்கும் வங்காரமாச்சு
நிசங்கண்டு போவதற்கு ஆதிகற்பம்
சொரிகிறேன் தீட்சைக்கு முதல்நந்தியாச்சு
சொர்னசுய நபியாரே சொக்கிக்கேளே. (303)

சொக்கிமிகப் பார்த்தோர்க்கு முதலெழுத்துமாச்சு
சொல்லவொண்ணு முதல்மூல மிதுவேயாச்சு
நெக்கிமிக அகாரதீட்சை செய்தபேர்க்கு
நிலைகண்டால் முதல்பாழா மென்றுமாச்சு
வெக்கிமிகப் போவார்கள் சமையத்தோர்கள்
வெளியாக யிதிலொன்றைக் கேட்டபோது
புக்கிமிகச் செனனத்தில் வுளல்வார்மாண்பர்
புண்ணியனே ரேசிக்கும் பொருள்தானுச்சே. (304)

பொருளான வெண்சாரை யாகிப்போச்சு
பொய்யில்லாக் கருஞ்சாரை யதிலேயாச்சு
அருளான பொருள்கண்டால் சாரமாச்சு
அப்பனே சாகாக்கா லிதுவேயாச்சு
சுருளான மச்சேந்திர மாகிப்போச்சு
சுழல்காற்று யிதுவாச்சு வாயுவாய்ப்போச்சு
இருளான மருளர்சொல்லைக் கேட்டுமைந்தா
இயங்காதே மயங்காதே இன்னங்கேளே. (305)

சீடன் வினவல்.

இன்னங்கே யென்றுசொன்னீர் குருவேஐயா
இயல்பான அகாரமுதல் யாவுஞ்சொன்னீர்
முன்னங்கே ளகாரமதை சிவமதென்றீர்
முனிநாதர் எப்படியோ முழுதுஞ்சொல்வீர்
பின்னங்கே நதிமூல மப்பூவென்றீர்
பிசகாமல் ஒவ்வொன்றின் சேதியெல்லாம்
பொன்னெங்கே யெந்தனுக்கு விபரமாகப்
பொருள்சொல்லும் பொன்கோடிக் கொக்குந்தானே

சீடனுக்குக் கூறுதல்.

ஒக்குந்தான் கொக்குபோல் பார்த்தபோது
ஓமென்ற விந்துவட்டத் துள்ளேசென்று
சொக்குந்தான் சொர்ணவிந்து சிவமதாச்சு
சொற்பமென்று எண்ணுதே அகாரமாச்சு
மெய்க்குந்தான் உச்சியுள் நாவுமேலே
மேலொழுகு மமுதந்தி மூலமாச்சு
சிக்குந்தான் சிவன்சிரசில் கெங்கைவைத்தார்
சின்மயமே சிவகங்கை யகாரமாச்சே. (307)

ஆச்சையா அடியேனுக் கனுக்கிரகித்தீர்
அடியேனுங் கண்டுமதைக் கொண்டேனையா
பேச்சையா சூதரசமென்றுஞ் சொன்னீர்
பெருமையுள்ள யிவ்விரண்டும் பேசவேண்டும்
வீச்சையா விவேகிகள்தான் யெழும்பொட்டாமல்
விந்துவென்ற பாம்பையுண்டால் சூதமாச்சு
பாச்சையா வுந்தனுக்குச் சொன்னேனையா
பற்பலவாய்த் தெரிந்ததனுல் ரசமாய்ப்போச்சே. ()

ரசமாகத் தெரிந்ததுதான் அகாரமாச்சு
ரவைரவையாய்த் தெரித்தரசம் ஒன்றுய்ச்சேர்த்து
நிசமாய்ச்சேர்ந் துண்பார்க்குச் சூதமாச்சு
நினைவையெழும் பொட்டாமல் வுண்டதாலே
எசமானுய்ப் போகாதே சொன்னேனென்று
எவர்கள்வந் தாலுமுன்னே வணங்கிநில்லு
விசமாய்கை யிதுவய்யா அறிந்துகொள்ளு
விபரிப்பேன் வங்வகார வாறுகேளே. (309)

வாருய் நீ வழியாகச் சொல்வேனப்பா
வழியறியா லோகர்செய்யும் வாதுபோலே
போருய் நீ மூச்சிழுத்து முறடாதேகேள்
பொருளான ரேசகந்தா னென்றுசொல்லி
தேருய் நீ கபாலந்தான் தெரித்துப்போகும்
தேசிகனே வாசியோக வழிகளெல்லாம்
கூருய் நீ யிதுவாசி யோகமென்பார்
குழியோட்டி யின்னூலைப் பதனஞ்செய்யே. (310)

செய்துபார் யின்னூலை செவ்வையாகச்
செப்புமிந்த ஞானத்தின் சூட்சந்தன்னைக்
கொய்துபார் பற்பலவாய்ப் பேரெட்டாமற்
குழந்தாய் நீ கேட்டதினல் கூறுவேன்யான்
உய்துபார் வாய்வதுதான் மனமாய்ப்போச்சு
உத்தமனே யம்மனந்தா னகாரமாச்ச
எய்துபார்த் துண்டாக்கா லாதிகற்பம்
என்மகனே வாய்வதினல் வகாரமாச்சே. (311)

ஆச்சுதப்பா வாய்வான மனதைமெள்ள
அறிவினல் வழிமாரா வசமாக்கிக்கொள்
ஏச்சுதப்பா யிச்சையிலே மனம்போனக்கால்
என்னசொல்வேன் சுழல்காற்றி லகப்பட்டாப்போல்
போச்சுதப்பா துரும்பாகி சுழலுங்கண்டாய்
போனமனம் சுழண்டாக்கால் பொருந்துமோசொல்
பேச்சுதப்பா நூல்களெல்லா மிந்தவார்த்தை
பேய்மக்காள் மூச்சிழுத்து ரேசிப்பாரே. (312)

ரேசிப்பா ரேசகந்தா னென்றுசொல்லி
எந்தனுட நூல்பாராத் தோடத்தாலே
வாசிப்பார் நூல்பேசும் வழியைக்காணர்
வந்தபடி பேசியல்லோ வழக்குச்செய்வார்
பூசிப்பார் செகக்கியானி யின்னூல்கண்டும்
புலிவிட்டுப் போகாதே புகழ்வேன்கண்டாய்
நேசிப்பார் தவசிகளு மிந்தநூலை
தினைவாக யான்சொல்லும் வாசிகேளே. (313)

வாசிபா ரிதுவாசி ரேசிப்பாய்கேள்
வண்டபிண்ட சர்வத்தில் நிறைந்துநீயும்
ரேசிப்பாய் ஓங்காரத் துள்ளேநின்று
யெவ்வுயிரில் நிறைந்ததப்பா கண்டுவாங்கு
காசியப்பா யென்றுசொல்லிப் போய்விடாதே
கங்கைநதி தீர்த்தமென்ற சங்கைவேண்டாம்
யோசிப்பாய் மூச்சிழுக்கச் சொல்லவில்லை
ஓமைந்தா யுந்தனுக்கே யுரைத்தேன்தானே. (314)

உரைத்தனப்பா அகாரத்தின் விபரமெல்லாம்
உள்ளபடி சொன்னேன்பார் கண்டுகொள்ளு
மறைத்தப்பா வுந்தனுக்குச் சொல்லவில்லை
மார்க்கமிது மயங்காதே மர்மஞ்சொன்னேன்
குறைத்தப்பா யின்னூல்போற் சொல்லாதப்பா
குருபுத்திர ரின்னூலைச் சரணஞ்செய்வார்
நிறைத்தப்பா யான்சொல்வேன் கேளுகேளு
நிகரில்லை நிராமயந்தா நுகாரங்கேளே. (315)

கேளேதா நுகாரத்தின் வாரெல்லாம்நீ
கேசரம்போற் சொல்லுமிந்தச் சூத்திரந்தான்
பாளேபி ராந்திகளும் நீங்கச்சொல்லும்
பஞ்சிலிட்ட தீப்போலப் பகருமின்னூல்
கோளேதான் சொல்லாது யின்னூல்தன்னில்
கோஷ்டமினிச் செய்யார்க ளின்னூல்பார்த்தோர்
மேலேநீ மெஞ்ஞானி யாகிப்போவாய்
மேதினியில் பந்தமதில் சிக்காய்காணே. (316)

காணேதா நுகாரமதைச் சொல்லிவாரேன்
கண்மணிவிண் ணுச்சுகரு நெல்லியாச்சு
ஊணேதான் ஓங்கார மாகிப்போச்சு
உமைக்கூட்ட மட்சரந்தான் உருதியாச்சு
தேனேதான் தெய்வமணி மாடமாச்சு
தேங்கொளிதான் கயிலாய மாகிப்போச்சு
நானேதா னுந்தனுக்குச் சொன்னேனப்பா
நாட்டிப்பார் வைகுண்ட நிசவீடாச்சே. (317)

வீட்டுக்குள் விளக்கொளிவு தானுமாச்சு
யிதுசிகர சத்தியலோக மாகிப்போச்சு
ஏட்டுக்கு ளெழுதாட்டால் காணப்போமோ
யேகநிரா மயமான சொரூபந்தன்னை
நாட்டுக்குள் நாயோட்டு மந்திரமாச்சு
நானுனக்காய்ச் சொன்னேனப்பா நடந்துபாரு
கோட்டுக்குள் ஒருவனல்லோ அறிவானித்தை
கோடிசித்து க்ஷணத்துக்குள் ளாடுவானே. (318)

ஆடிப்பார் அகாரமதை யுகாரத்தில் நாட்டி
அரகரா உகாரமிரண்டுஞ் சேர்ந்தாலப்பா
பாடிப்பார் நிராமயந்தா னென்றுசொல்லிப்
பளிங்கேழாம் பூமியின்மேல் நின்றுதப்பா
ஓடிப்பார் சொரூபவெளிக் குள்ளே நன்றாய்
ஒன்றுகேள் நாமங்கே கேட்கும்கேட்கும்
கூடிப்பார் குருபுத்திரர்கள் சேரச்சொன்னேன்
குருக்குவழி நேர்யிதுதான் கூடுநன்றே. (319)

சீடன் வினவல்.

நன்றென்றீர் யென்குருவே தாந்தமூர்த்தி
நாதாந்த வுகாரமதற் கிவையுஞ்சொன்னீர்
கன்றென்றீர் கருநெல்லி வுகாரமென்றீர்
கணக்காகச் சொல்லுமையா விண்ணென்றீர்முன்
ஒன்றென்றீர் ஓங்காரச் சத்தமென்றீர்
உகாரகயி லாமென்ற வகையைச்சொல்வீர்
சென்றென்றீர் யான்சேரச் சொல்லீரையா
செவ்வையாய் ஒவ்வொன்றின் சோதிசொல்லே. ()

சீடனுக்குக் கூறல்.

சொல்லே நீ தானென்று கேட்டபிள்ளாய்
சொற்பமல்ல உகாரமது கற்பமல்லோ
மெல்லவே நோக்கிப்பார் உண்மைதோன்றும்
மேன்மைருத்திர சிரசதனுள் விண்ணதாச்சு
வெல்லேதான கைலாயம் கொலுவாய்ப்போச்சு
வேதாந்தஞ் சொல்லிவிட்டேன் உன்கண்மையம்
நில்லேதான் மையவுமை ருடலுதனுச்சு
நிறம்நீலம் இலர்தமப்பா கருநெல்லிசேரே. (321)

சேர்நெல்லி சோலையாய் நிலைத்துப்பார் நீ
　　செப்பியசத் தியலோக வைகுண்டங்காணும்
பார்நெல்லி சோலைபோய் பஞ்சவர்ணம்
　　பரங்கான பூரகந்தான் அதிலேசெய்வாய்
வேர்நெல்லி சோலைபோய்த் தேடவேண்டாம்
　　வெளிவிட்டேன் உகர அகார உளவையெல்லாம்
ஆர்நெல்லிச் சோலையோய் நிலைக்கப்போறூர்
　　அரகரா அறிவுள்ளா யறிந்துநாடே. (322)

நாடறிந்து சோலையிலே நாடிப்பார்பார்
　　நற்குறியை யுனக்குரைத்தோன் நாதத்துள்ளே
வீடறிந்து விளையாடு வுனக்குச்சொன்னேன்
　　விதைபுருவ மையமென்றே விள்ளும் நூற்கள்
ஆடறிந்து சோடிகலை யாமல் நின்று
　　அந்தந்தச் செயலறிந்து ஆடிப்பாரங்
கூடறிந்து கூடுதான் தம்பத்தாட்டம்
　　குறிமையம் பூரகஞ்சேர்த் துண்டால்தானே. (323)

சேர்த்துண்டால் பூரகந்தான் செப்பிப்போட்டேன்
　　சேயெம்மை யண்டியதால் செம்மையாய்த்தான்
கோர்த்துண்டால் எவ்வாறோ வென்றுகேட்பாய்
　　குறையாமல் நிறையாய்த்தான் கூறிப்போட்டேன்
பார்த்துண்டால் வேணுமென்றே சொல்லிவைத்தேன்
　　பதிவாக அதீதமெல்லாம் பாட்டுக்குள்ளே
ஆர்தொண்டு செய்தங்கே பார்க்கப்போறூர்
　　அதீதமுப்பத் திரண்டினிலே யறிநதுகொள்ளே. ()

அறிபிள்ளாய் பரிபாஷை சொல்லவில்லை
　　அந்தந்த நூல்களிலே மறைத்துச்சொன்னூர்
தெரிபிள்ளாய் விரிவாகச் சொன்னேனிந்நூல்
　　தேங்கொளியைத் தட்டிவிடு தேசோனந்தம்
வெரிபிள்ளாய் வெட்டவெளி யாகச்சொன்னேன்
　　வேகவென்றால் வேறில்லை பாருபாரு
குறிபிள்ளாய் நெறிபிள்ளா யன்புள்ளாய்நீ
　　கும்பகங்கொள் கொலுதாண்டு பதியதாமே. (325)

பதியதுவே பார்த்தோர்க்கு அங்கொன்றில்லை
　　பார்ப்பவர்க்கோ ருறவோரும் பெற்றோரில்லை
விதியிதுவே யதிலொருவர் கண்டோரில்லை
　　விம்மட்டம் மட்டென்று சொல்லப்போமோ
கெதியதுவே யதுவரையான் சென்றுபார்த்தேன்
　　கேள்பிள்ளாய் கனசரா சரமதண்டம்
மதியதுவே யடங்கலுந்தா னதிலயிக்கம்
　　மகாஅபத்த மதுநித்தியம் பரிசுத்தந்தானே. (326)

பரிசுத்த மானவிடங் காட்டிவிட்டேன்
　　பாருலகு மனித்தியமது நித்தியமப்பா
இருசுத்த மானகொலுத் தாண்டிமேல்நீ
　　இடமதுவே பொருளதுவே யேகிநில்லு
நெறிசுத்த மாகவங் கிருமவுனம்
　　நேர்நிரா கார்சோதி பேச்சங்கில்லை
குறிசுத்த மானசுகஞ் சொக்கித்தூக்கங்
　　குவித்துநீ யங்குநில்லு கும்பந்தானே. (327)

சீடன் வினவல்.

தானமது தனிக்கும்ப மெனக்குரைத்தீர்
　　தங்குமிட மதுவெனவே தனிமையானேன்
மோனமது வென்னையங்கே யிருக்கச்சொன்னீர்
　　மொளியிலைமைக் கலக்கவைத்தீ ரொத்துக்கொண்
தேனமுது கலந்துண்ட வின்பம்போலோர் [டேன்
　　தேவரீ ரிடப்பொருளு மேவல்சொன்னீர்
கோனமதுள் மேல்நோக்கிப் பார்த்தேனுண்மை
　　குறிகலை யாமலும்மைப போற்றுவேனே. (328)

போற்றியுமைப் பொற்பூவா லர்ச்சித்தேன்யான்
　　பொன்னுலகங் கண்ணாலே கண்டபோதே
ஆற்றிநீ யென்மனதைப் பொன்போலையா
　　அடுக்காறுங் கண்டப்பால் நின்றேன்யானும்
ஏற்றிநீ பொருதீப மெங்குஞ்சோதி
　　யெங்கும்யே கோபமதா யிருந்திட்டேன்யான்
மூற்றிய மூப்மூல மெனக்குச்சொன்னீர்
　　முதற்பாக மென்குருவே யதுமெய்வாழ்வே. (329)

சீட்னுக்குக் கூறல்.

அதுவாய் நீ யதுவாக வங்கேநிற்பாய்
அவ்வருளே யுன்வாக்கு வழியேயொக்கும்
பொதுவாயுந் தன்வாக்குப் பொய்யாதப்பா
போற்றும்புவி பொற்சிலைபோ லங்கேநில்லு
மெதுவாய்வந் துனையழைப்பார் நீபோகாதே
மெல்லவே தேடிவந் துனைப்பணிந்து
யெதுவாய்வந் துனைக்கேட்டா லதுவைச்சேகி
என்மகனே சனங்களுன்னை வணப்பிப்பாரே. (330)

வணப்புவார் வகண்டமதாய்க் கண்டபின்னாய்
வண்டமது கண்டங்கே வழிவேறில்லை
தினமங்கே சேர்வையா யிருநான்சொன்னேன்
திங்கள்ரவி பூரணம்போ லெங்கும்பாரு
செனமிங்கே வந்துன்னைப் பணிகுவார்கள்
சேர்வையது பார்வையதாய் சேவித்தேநில்
மனமங்கே வைத்திடுநீ மற்றொன்றில்லை
மண்ணுலகில் முனியாவாய் நினைத்ததாமே. (331)

ஆம்நினைத்த வாரெல்லா மதிநூலாகும்
அவ்வருளின் விளையாட்டை யறியப்போமோ
போம்நினைத்த வாறெல்லாம் மனந்தானப்பா
போகவிட்டால் பொருள்கிட்டா பொருந்திலில்லா
நாம்நினைத்த வாறெல்லாம் நம்மாலில்லை
நானுனக்காய்ச் சொன்னனப்பா னண்பனென்று
ஓம்நினைத்த வாறெல்லாஞ் சித்திசொன்னேன்
ஓங்அங்உங் வுண்மையாய் நம்பினோர்க்கே (332)

நோக்கதிலே நுட்பமதாய்ச் சொல்லிப்போட்டேன்
நுட்பமதாய் ஓங்கார உளவைச்சொன்னேன்
தாக்கதிலே தனிக்குமிடம் சொல்லிப்போட்டேன்
தாரகத்தி னிலையதுவே தயங்காதேநில்
போக்கதிலே மனதையனு தினமுமப்பா
பொன்போலே யுன்மனதை யதிலேதாக்கு
ஆக்கதிலே யுன்மனதை யலைவொட்டாமல்
அங்உங்ஓம் என்றதுவுஞ் செயமதாமே. (333)

செயமாகும் பூரணத்தின் மகிமையாலே
செய்காரியங்களெல்லாஞ் சித்தியாகும்
லயமாக்கு வுன்மனதை யதனுலாக்கு
லரிக்குமூத லெழுத்தெனவே யறிந்துகொண்டு
வயமாகும் யகாரத்துள் சென்றுநன்ருய்
வளவிட்டுச் சொல்லவொண்ணு வாணன்சோதி
சுயமாகும் பிரகாச அருபாருபம்
சுருவாயான் அங்உனக்காய் வெளிவிட்டேனே. ()

விட்டேன்யான் மாணுக்கா யுனக்காய்ச்சொல்ல
விதுசூது யில்லையப்பா விவேகத்தோனே
பட்டேயான் விட்டபோ தகண்டம்போலே
பாரில்சித்தர் பரிபாசை யாகச்சொன்னூர்
தொட்டேயான் காட்டிவிட் டதுபோல்சொன்னேன்
துலங்குநவ ரத்னவொளி தீபம்போல்தான்
கட்டாக யினிவுனக்காய்ச் சொல்வேனப்பா
கனகமய மும்மூர்த்தி சொருபந்தானே. (335)

சொருபத்தின் வரலாறு அப்பாகேளு
சொல்லாது யென்னூல்போ லெந்தநூலும்
இருபத்தின் மார்க்கமதா யின்னூல்போல
இந்நூற்குள் சர்வநூ லயிக்கியமப்பா
குருபதத்தின் வழிநம்பி வந்தோர்க்கெல்லாம்
குறிகாட்டி யிடம்பொருளு மேவல்தந்தேன்
அருபத்தின் சொருபமதை யடியார்காண
அகக்கண்ணுந் தந்தேன்பா ரதனுல்காணே. (336)

காணப்பா நான்சொன்ன மார்க்கந்தன்னைக்
கழருதே கருமிகட்கு யிந்தச்சூட்சம்
வேணபடி பொய்பேசும் வீணரோடு
வீணிலே திரியாதே அப்பாவென்று
தோணவே சொல்லிவிட்டேன் வெளியதாகத்
தோய்ந்தபொரு ளியாவற்றும் பால்போலாக
ஊணிப்பா ரின்னூலை வெளிவிடாதே
உத்தமனே யாருக்குங் கொடுத்திடாதே. (337)

ஆருமில்லை வடபாக மக்கத்தேதான்
அங்கிருக்கும் வேளையிலே நூலைச்செய்தேன்
கோறிநின்றேன் குருபாதந் தொண்டுபண்ணி
குவலையத்தில் வாதத்தின் திறவுகோலுங்
கூறினேன் தனியாக நானூருந்தான்
குறிப்பாகப் பஞ்சமித்திர மூன்னூறுஞ்சொன்னேன்
காரியமாய்ச் சுன்னமூன் னூறுஞ்சொன்னேன்
காட்டாதே காயகற்பம் பத்துதானே. (338)

பத்தான களங்கமூன் னூறுஞ்சொன்னேன்
பாலகனே ஆயிரத்தி யிருநூறுசொன்னேன்
சித்தான அறுநூறு சுன்னஞ்சொன்னேன்
செகமீதிற் செந்தூரமூன் னூறுஞ்சொன்னேன்
மூத்தாகக் காணுதற்கு ஞானம்சொன்னேன்
முடிவாகச் சூஸ்திரத்தின் சுருக்கஞ்சொன்னேன்
எத்தாகப் பாடிவிட்டேன் தாம்பரவித்தை
எடுத்துரைத்தே னிருபதுநூற் கோர்வையாமே. ()

ஆமடா யென்னைப்போ லார்தான்சொல்வார்
அாகரா உளவையெல்லா மெடுத்துரைத்தேன்
தாகமடா வகத்தீச ரெந்தனுசான்
தடையறவே யுளவையெல்லா மெனக்குச்சொன்னார்
நாமடா வவர்வுளவுங் கைபாகங்கள்
நாட்டினே னின்னூலில் மெத்தவுண்டு
ஆமடா கருவான தெல்லாஞ்சொன்னேன்
அன்பாகக் கார்த்திடுவாய் நூலைத்தானே. (340)

தாம்பிரவேதை.

நூலான நூலதனைப் பதனம்பண்ணு
நுணுக்கமதாய்ச் சொல்லுகிறே னின்னங்கேளு
பாலான தாம்பிரமாம் வேதையப்பா
பகருகிறேன் கருங்கையான் கருவூமத்தன்
சேலான கருவுள்ளி மூன்றுமொக்கச்
சேர்த்தரைத்துச் செம்புக்குக் கவசஞ்செய்து
மாலாகப் பத்தெருவிற் புடந்தான்போடு
மகத்தான செம்பதுவு மூறல்போமே. (341

போனபின்பு மூசையிலே வைத்துருக்கிப்
போக்கோடே கண்விட்டு ஆடும்போது
மானமுள்ள யென்னையா கருங்கையானின்
மகத்தான சாறதனைப் பிழிந்துபாரு
தேனமுதம் பத்தரையாம் தங்கமாச்சு
சேரடா முப்பதுக்கு ஒன்றுதங்கம்
வானவருஞ் சித்தர்களு வாழ்த்துவார்பார்
வையகத்தி லெனைப்போலே சித்தன்பாரே. (342)

பாரடா துருசினிட போக்குச்சொல்வேன்
பதறாதே துருசதுவே பலமதாகும்
நேரடா செயநீரா லரைத்துமைபோல்
நேர்மையுடன் பில்லைசெய்து ரவியில்வைத்து
கோரடா சிவகரந்தை வண்டுமூலி
கோர்த்தரைத்துப் பில்லைக்கு கவசஞ்செய்து
பாரடா பத்தெருவிற் புடந்தான்போடு
பாலகனே யென்னசொல்வேன் சுண்ணமாச்சே. ()

சுண்ணத்தின் காரமதை யென்னசொல்வேன்
சூட்சமந்தா னிவ்வேதை சிடிகைவேதை
பின்னமது வாராது யிந்தப்பாகம்
பிழைப்பதற்கு மதிமேலே பத்துக்கொன்று
சொன்னபடி குருவதனைப் பார்ய்ச்சிடாய்நீ
தொல்லையறும் வயதுபதி னறதாகும்
என்னமோ சொன்னேனென் றெண்ணவேண்டாம்
யென்னுசா னகத்திசர் சொன்னவாக்கே. (344)

வாக்கான அவர்வாக்குப் பொய்யாதப்பா
வையகத்தி லவர்போலே வுண்டோசித்து
போக்குதனை விள்ளாதே கருமிகட்குப்
புத்தியுள்ளாய் பூசித்துப் பதனம்பண்ணு
நாக்கமலத் தாயாரி னருளையுன்னி
நடத்தடா யான்சொல்லும் வேதையெல்லாம்
தாக்குவே னின்னமுண்டு சிடிகைவேதை
தயங்காதே சொல்லுகிறே னன்றாய்க்கேளே. (345)

நன்றான ரசத்தின்செந் தூரங்கேளு
நாயகனே ரசமதுவே பலந்தான்கொண்டு
குன்றான குன்றுதனி லிருக்குமூலி
குணமுள்ளாய் னேற்பூண்டு வரைத்துநன்றாய்
பன்றான ரசமதனை யுட்பொதிந்து
பட்சமுடன் எழுசீலை வலுவாய்ச்செய்து
நன்றாகக் கெசபுடந்தான் வைத்துப்பின்பு
நவிலுவேன் புடமாறி யெடுத்துப்பாரே. (346)

எடுத்துப்பார் ரசங்கட்டிச் செந்தூரிக்கும்
யேகாந்த தரிசனமோ சிகப்புமெத்த
தொடுத்திட்டேன் மூலியுட பரிட்சைகேளு
சொல்லுகிறேன் தேள்மீதில் சார்பிழிந்தால்
மடிந்துபோம் தேளதுவு மூலியாலே
மாட்டுகிறே னரவத்தின் முன்னெறிந்தால்
கடிந்துமே போகாது தடையாய்நிற்கும்
கண்மணியே யதையெடுத்தா லேகுந்தானே. (347)

ஏகுமே பேர்சொல்லி வேர்பிடிங்கில்
என்னசொல்வேன் மாரணமாங் கருமமாடும்
வாகுடனே நாதாக்க ளருளினாலே
வரைந்திட்டேன் சாத்திரத்தின் மறைப்பையெல்லா
[ம்
சாகாத வரம்பெற்றேன் ஆசானாலே
தாரணியில் வாதவித்தை யோகவித்தை
போகாமல் சடலத்தை யிருத்திக்கொள்ளும்
புண்ணியனே யவ்வித்தை தான்கண்டேனே. (348)

கண்டேனே ஞானமுதல் மாந்திரீகம்
காரியமாய் வயித்தியத்தி னுளவுங்கண்டேன்
சண்டமா ருதம்போலே யிறப்போர்தம்மைச்
சாகாமல் பிழைப்பதற்கு வுளவுங்கண்டேன்
எண்டிசையில் தானிருக்கு மூலியெல்லாம்
என்குருவா மகத்தீச ரருளாற்கண்டேன்
விண்டேனே யுந்தனுக்காய் விபரமெல்லாம்
விருப்பமதாய்ச் சொல்லுகிறே னின்னங்கேளே. ()

சொல்லுகிறேன் செந்தூரம் பத்துக்கொன்று
சொகுசாக மதிமேலே யீய்ந்துபாரு
வெல்லுவாய் வயதது வொன்பதாகும்
வேகமடா செந்தூரப் போக்குக்கண்டாய்
நல்லவித்தை யிவ்வேதை கைவிடாதே
நாடதனில் கிடைக்காது யிந்தப்போக்கு
வல்லமையா யாடிப்பார் சொன்னதெல்லாம்
வகையறியா மூடருக்கு வெய்தாதென்னே. (350)

எய்யாது யின்னமொரு போக்குச்சொல்வேன்
யெழிலான ரசிதமது வித்தைகேளு
பொய்யாது குருபரனுர் சொன்ன வாக்கு
பூவுலகி லுந்தனுக்காய் யியம்புவேன்பார்
மெய்யாகத் தாம்பரத்தை வுருக்கி நீதான்
மேன்மையுள்ளாய் வெட்பூண்டின் சாரில்தோய்த்து
கைதவமாய் யேழுவிசை யுருக்கிச்சாய்க்கக்
கண்மணியே தாம்பரந்தான் வெளுத்துப்போமே.

போமடா அதின்பிறகு சொல்லக்கேளு
புகழான வயதுபதி முறதாகும்
தாமடா வங்கபற்பஞ் சொல்லக்கேளு
தயவான வார்பூண்டை யரைத்துநன்றாய்
வாமடா வங்கத்திற் கவசஞ்செய்து
வகையாகப் பத்தெருவில் புடந்தான்போடு
நாமடா யியம்பியதோர் வங்கந்தானும்
நாயகனே திருநீறாய் நீறிப்போமே. (352)

நீறிப்போம் பற்பமது பத்துக்கொன்று
நிலையாகத் தாம்பரத்துக் கீய்ந்துபாரு
வீறியனே செம்பதுதான் சத்தியாச்சு
வீணிலே போக்காமல் நாலுக்கொன்று
காரியமாய்த் தங்கமது சேர்த்துட்பாரு
கண்மணியே வயததுவே யொன்பதாகும்
நாரியர்பால் போகாதே தர்மஞ்செய்து
நன்றாகச் சாஸ்திரத்தை யாய்ந்துபாரே, (353)

யாரே நீ சீவனத்தைச் செய்துகொண்டு
பண்பாக வெந்தனுட நாலைப்பாரு
ஓரே நீ யொருவருக்குங் காட்டாதப்பா
சிற்பரனுந் தற்பரனைத் தியானம்பண்ணு
ஊரே நீ திரியாதே யுற்றுப்பாரு
ஓகோகோ அம்பாளி னுட்டம்பாரு
காரே நீ கண்மணியே பதியில்சொக்கு
கருத்தாக நாதவிந்தைக் கண்டிடாயே. (354)

கண்டிடா யின்னமொரு கருவைச்சொல்வேன்
கழருதே செம்பினுட சுத்திகேளு
விண்டுபார் செம்பதுவைத் தகடதாக்கி
விண்மணியே உத்தாமணி யிலையரைத்து
சண்டமா ருதம்போலக் கவசஞ்செய்து
சாங்கமுடன் பத்தெருவில் புடந்தான்றொண்டு
கண்டபடி மேனியிலைப் புடமிரண்டு
காட்டாதே ஊமத்தைப் புடமொன்றுச்சே. (355)

புடமதுதான் தீர்த்தபின்பு குருச்செம்பாச்சு
புண்ணியனே தங்கமது நாலுக்கொன்று
தடம்போலச் சேர்த்துப்பார் வயதேழாச்சு
தாரணியி லிவ்வேதை வெகுசுருக்கு
வடமான கசடருக்குக் காட்டொணுது
வாகாகச் சீவனத்தைச் செய்துகொண்டு
மடமான ஸ்தம்பத்தை நோக்கிப்பாரு
மைந்தனே வாதமது சிக்கும்பாரே. (356)

சிக்குந்தா னின்னமொரு போக்குச்சொல்வேன்
சேயெம்மை யண்டியதால் செவ்வையாக
ஒக்குந்தான் கவுதும்பைத் தூண்டிமூலி
ஓகோகோ வரைத்துநன்றய்த் தங்கத்திற்கு
புக்கியே கவசித்துப் புடமேயொன்று
போட்டுயெடு திருநீருய் நீறிப்போகும்
தக்கபடி சொன்னேனே யுந்தனுக்காய்த்
தயங்காதே வசீகரத்தின் குணத்தைக்கேளே. (357)

குணமாகச் சொல்லுகிறேன் வாதவித்தை
குவலயத்தில் சொல்லாது யென்னூல்போல
மணமான நூலப்பா யெந்தன் னூலு
மார்க்கமெல்லாந் தெரியுமடா யிந்தநூலில்
சணமான வேதையடா செம்புசுத்தி
தாரணியில் செம்பதனைத் தகடதாக்கி
கணப்பொழுதில் நீயேகி சுருட்டிமூலி
கண்மணியே கொண்டுவந்து சொல்லக்கேளே. ()

கேளேதா னறைத்துநன்றாய்ச் செம்புக்கப்பா
கெடியாகக் கவசித்தி மாணுக்கா நீ
நாளேதான் போக்காமல் யெருவோபத்தில்
நாயகனே புடம்போட ஊறல்போச்சு
காணேதான் பத்தரையா மாத்துமாச்சு
காட்டாதே சீவனத்தைச் செய்துகொண்டு
வாளேதான் நான்சொன்ன சித்தியெல்லாம்
வையகத்தில் ஆடிப்பார் அருமைதானே. (359)

அருமையாம் வெள்வங்க நீர்தானேக
வப்பனே காடியிலே கொண்டுவந்து
பெருமையாய் வங்கத்தைத் தானுருக்கிப்
போக்கோடே சார்பிழிந்தால் நீர்தானேகும்
தருமமது நடத்தியப்பா தரணிதன்னில்
தற்பரனைத் தியானித்துச் சொக்கிப்பாரு
கருமத்தில் சிக்காதே வேதைபார்த்துக்
காரியமாய்க் கண்மணியே விண்ணைப்போற்றே. ()

போற்றடா பிரமத்தின் தியானப்பாரு
பொன்னுலக வதிசயமோ யென்னசொல்வேன்
நாற்றிசையில் நாதாந்த சித்தரெல்லாம்
நமனுரைத் தான்விலக்கிக் கொலுவில்நின்றார்
காற்றடா வாசியைத்தா னேக்கிப்பாரு
கருவினமே கொட்டாவி சுழியைப்பாரு
சாற்றடா சிறுவாசல் தன்னைநோக்கித்
தற்பரனார் பதியேகும் பாதைதானே. (361)

பதியான நம்பத்தைக் கண்டும்தறு
பாங்குபெறக் குழி நிலையி லோட்டிப்பாரு
கதியான உன்நாவு அன்றுவில்தாக்கு
கற்பகமே உச்சியென்ற பதியைக்காணு
சதியான நமனுரின் பதியைத்தாண்டு
சாதகமாய் நாட்டுநாள் பழக்கம்பண்ணு
உதிக்குமே பஞ்சவர்ணக் கூத்துக்காணும்
ஓர்மனதாய் நீயிருந்து சொக்கிப்பாரே. (362)

பாரேநீ தசதீட்சை யொன்றாய்க்காணும்
பாருலகில் பஞ்சகர்த்தா ளாட்டமாட்டம்
ஒரேதான் வழிபிசகா வண்ணம்பாரு
சிற்பரனு மாசானத் திசர்பாதம்
காரேநீ தொண்டுபண்ணி தியானம்பாழி
கண்மணியே காட்டுவார் கலங்காதே நீ
ஊரேதான் திரிந்தலைந்து போகாதப்பா
உற்றபொருள் தெரிந்துகொண்டு செய்துகொள்ளே

யேமவித்தை.

கொள்ளடா விள்ளாதே யேமவித்தை
கூறுவேன் வார்மூலி கொண்டுவந்து
உள்ளபடி மதியதனை யுறக்கியப்பா
வுத்தமனே கண்விட்டு ஆடும்போது
நள்ளடா சார்பிழிந்து யெடுத்துப்பாரு
நானிலத்தில் யென்னசொல்வேன் வயதேதென்றால்
கள்ளமது யில்லையடா யிருபத்தைந்தாம்
கண்மணியே யேமத்தின் வயதுதானே. (364)

அயத்தங்கம்.

தானான அயத்தங்கஞ் செப்பக்கேளு
சரியாகத் தான்சொல்வேன் மகிமைமெத்த
தேனான யென்சீஷா வட்டப்பத்திரி
தேவனெனுங் குருமுனிதான் சொன்னவாக்கு
கானான கானகத்தி லிருக்குமூலி
கண்மணியே மதுரைக்கு மேற்கேயையா
கோனான சதுரகிரி குகைதானென்று
கொற்றவனே யதில்வசிப்பார் குமாரசித்தே. (365)

சித்தான மகாசித்து குமாரதேவர்
செருக்கின்றி யம்மலையில் துவாபரத்தில்
பத்திசெய்ய வந்தனரா மின்னுள்மட்டும்
பாலகனே யிருக்கின்றா ரநாட்டத்தோடு
கத்தனைப்போல் சொலிக்கிறதே தேகமப்பா
கற்பகம்போல் வளருகின்ற தையாவாவுள்
இத்தகைய சித்தருக்கு மலையிேனாம்
இலங்குதே வட்டப்பத் திரிதான்காணே. (366)

காணுமே யாங்கூறு மூலியெல்லாங்
காட்டுவார் குமாரசித்தைத் தொண்டுபண்ணல்
தோணுவார் பணிந்தவர்க்கு யென்னூலுங்காட்டி
சொல்லுவா ரென்னூலில் மொழிந்தபாவை
வாணுவமாம் அயத்தைநீ காய்ச்சியப்பா
வட்டப்பத் திரிச்சாரில் தோய்க்கத்தோய்க்க
நாணுமே யிரும்பதுதான் தங்கமாச்சு
நாதாந்த யோகிக்குச் சொன்னபோக்கே. (367)

நாதாந்த சித்தருக்கா மிந்தவித்தை
நலமில்லா சமுசாரிக் கெய்யாதப்பா
வேதாந்த ரிஷிகட்குச் சொன்னவித்தை
விண்ணுலகம் மண்ணுலகஞ் சொலிக்குமேமம்
வாதாடும் பதினெட்டுச் சித்தரப்பா
வகையதனைக் காண்பிக்கப் பயந்தரரையா
மூதேவிச் சண்டாளக் கருமிமாண்பர்
மூன்னேனைத் தேடினல் கிடைக்கும்பாரே. (368)

பாரேதான் திரிந்தலைந்து வருகும்போது
பாங்கான சதுரகிரி மேற்கேயையா
சீரேதான் ரோமரிஷி யாச்சிரமந்தான்
திகழான மலையாறு குகைகள்மூன்று
காரேதான் குகைக்குள்ளே ரோமர்தானுங்
கனிவாக வீற்றிருப்பார் கர்த்தாபோல
தேரேதான் வரைசுற்றிக் காவலப்பா
தேர்ச்சியுள்ள காடிபுலி சிங்கந்தானே. (369)

சிங்கமுடன் செந்நாயுங் கருநாயுந்தான்
செகமதிக்கும் அரக்கரோ டனந்தம்பேர்கள்
இங்கிதமாய்ப் புலியோடு காளிதானம்
இயலான குறலிகுட்டி சுடலைசாத்தான்
பொங்கமுடன் மாடனு ரிருளனோடு
புகழான வீரபத்திரன் முனிகருப்பன்
சங்கையின்றிக் காவலப்பா வவரைச்சுற்றித்
தயாபரனே யென்சொல்வேன் மகிமைதானே.370)

தானான ரோமரை நீ காண்போமென்றால்
சதுரகிரிக் குகைதனிலே காணலாகும்
தேனான தியானமது செய்யவேண்டும்
தேசத்தில் அவரருள்தான் கிட்டுமப்பா
கோனான ரோமரிஷி தன்னைக்காண
குறுமுனியென் ஞசானை வேண்டிக்கொண்டால்
மானான வென்சீஷா போய்வாவென்று
மகத்தான மூலிகையைக் காண்பிப்பாரே. (371)

மகத்தான மிருகத்தின் வணங்கிமூலி
மாட்சியுடன் கைகொடுத்து மிருகத்தின்முன்
அகத்தியனார் சீடன்யான் யாக்கோபென்று
அரையடா மிருகமெல்லா மோடிப்போகும்
சகத்திலே பூதகண மெல்லாமோடும்
சார்ந்து நீ வாமரிஷி தன்னைக்கண்டு
வகமகிழ்ந்து யெந்தனுட பெயரைச்சொல்லு
வரிசையுடன் றனழைப்பார் வளமைதானே. (372)

வளமையுட னழைப்பாரே யெந்தனுசான்
வாகாகச் சொல்லிவிட்டார் யாகோபென்று
இளமையடா யென்வயது பதினாறப்பா
என்மகனே குருமுனிதா னறைந்தார்போல
களங்கமின்றிச் சென்றேனே ரோமாண்டை
கருத்துவந்து யென்னையழைத்தார் கருணையாக
உளவான பேர்க்கெல்லாங் காண்பித்தார்பார்
உத்தமனே ஞானமொடு வாதந்தானே. (373)

வாதந்தான் முன்சொன்ன வயப்போக்கையா
வளமையுடன் வட்டப்பத்திரி சிவப்பதாகும்
நீதமுட னம்மலையி லிருக்குதையா
நேர்மையுடன் கொண்டுவந்து செப்பக்கேளு
சாதகமாய்த் தானரைத்து வாய்தனக்குச்
சாங்கமுடன் கவசித்துப் புடந்தானையா
தோதகமாய்க் கெசபுடந்தான் போட்டுப்பின்பு
தேரும லதையெடுக்கத் தங்கந்தானே. (374)

தங்கமது சிவயோகிக் கெய்தும்பாரு
தாரணியில் மாந்தருக்கு எய்யாதப்பா
சங்கையின்றிச் சொல்லிவிட்டே னுந்தனுக்காய்
சார்பான சித்தரெல்லா மிதிலேதோயும்
கங்கையொடு திங்களணி சங்கரன்றான்
காட்டினார் குருமுனிக்கு ஞானமெல்லாம்
புங்கசித்தி யெட்டுடைய குருமுனிதான்
புகட்டினா ருலகிலுள்ள சித்துத்தானே. (375)

சித்தான கருவிகர ணங்களெல்லாம்
செப்பினார் குருமுனிதா னெந்தனுக்கு
எத்திசையு மென்னூலுக் கெதிர்நூலுண்டோ
என்றுசான் மூதற்கொண்டு சித்தரெல்லாம்
நத்தினா ரென்னூலை வெகுவாயப்பா
நாயகனே மறைப்பில்லை யென்றுசொல்லி
மூத்தான ஞானமுதல் மாந்திரீகம்
முன்னின்ற வாதமொடு வைத்தியந்தானே. (376)

தானான வறுபத்து நாலுசித்து
சாற்றினேன் மறைவின்றி திறவுகோற்போல்
தேனான கண்மணியே நூலையப்பா
தேசத்திற் கருமிகட்குக் காட்டாதையா
கோனான குருவதனை வணங்கிநில்லு
கோடிபொரு ளீய்ந்தாலும் நூல்கொடாதே
ஆனாலும் ஆகாகா நானூறுபோல
அறையவில்லை சத்தாகு மிந்தநூலே. (377)

சுத்தான வைத்தியம்பன் னிருநூறாகத்
தான்சொன்னே னுந்தனுக்கு வெளியதாக
முத்தான வைத்தியசிந்தா மணியேழ்நூறும்
முறையாகக் குருநூலம் பதுவுஞ்சொன்னேன்
சித்தான வைத்தியம் நானூறும் சொல்லிச்
சிறப்பாகக் கைபாக முழுதுஞ்சொன்னேன்
வித்தான வைத்திய முன்னூறுஞ்சொல்லி
விளங்கவே சூஸ்திரமுப் பதுஞ்சொன்னேனே. ()

சொன்னதுவு மிதுவரையோர் கோர்வையாகும்
சுகமாக வாதவித்தை தெரிவதற்கு
நன்னயமாய்க் களங்குமுன் னூறுசொன்னேன்
நலமான பஞ்சமித்திரம் மூன்றுநூறும்
பின்னமிலாச் செந்தூர மூன்றுநூறும்
பேணியே நூத்தியன் பதுவுஞ்சென்னேன்
கன்னல்போ லதைக்குறுக்கி அன்பதுந்தான்
கழறினேன் நாதாக்கள் மெச்சத்தானே. (379)

மெச்சுகின்ற இடைபாகம் பதினாறும்
விதவிதமாய்ச் செய்பாகம் பதினாறுந்தான்
அச்சமின்றிச் சொல்வேனிதுவோர்கோவை
யாகவே சொன்னபின்பு சுண்ணஞ்செய்ய
பச்சமுடன் அறுநூறு சுண்ணக்காண்டம்
பகர்ந்துமே அதைக்குறுக்கிச் சுருக்கமாக
இச்சையுடன் சுண்ணமுன் னூறுஞ்சொன்னேன்
இயல்பாக இன்னமுந்தான் சொல்லுவேனே (380

சொல்லினேன் சுண்ணமுன் னூறைச்சுருக்கிச்
சூஸ்திரமாய் நூற்றியம்பதுவுஞ் சொன்னேன்
வல்லமையா யதன்சூஸ்திர மைம்பதுவும்
வகையாகத் தண்டகமும் நூறுஞ்சொன்னேன்
நல்லதொரு சாஸ்திரங்க ளாறுஞ்சேரில்
நலமாகக் கோர்வைநூ லாகும்பாரு
மெல்லவே யென்னூலைக் கோர்வைசெய்து
வேண்டியே பார்த்தோர்க்குப் பொன்னும்பாரே. ()

திராவகம்.

பொன்னான திராவகமாம் வகாரத்திற்கு
புகலவில்லை பதினெண்சித் தாதியெல்லாம்
பன்னான சூடனவச் சாரஞ்சீனம்
பாரன்ன பேதிவகை பலந்தானென்று
தன்னான வெடியுப்புப் பலந்தான் நாலு
சாதகமாய்க் காரமது பலந்தான் நாலு
மின்னான மூத்திரமோ படி நாலுக்குள்
விளங்கவே மருந்தெல்லாம் பொடித்துப்போடே. ()

போட்டேதான் கிண்டி நன்று யுறவுசெய்து
புகழான வாலைதனி லடைத்துக்கொண்டு
வாட்டவே திருகுகள்ளி விறகால்தீயை
மாட்டுவாய் சாமத்துள் வருநீரெல்லாம்
ஆட்டெல்லா மிதினூட்டு வழலையாட்டு
அப்பனே வெளியாக உனக்குச்சொன்னேன்
காட்டாதே இம்முறையை யொருவருக்குங்
கைமுறையை நன்றாகச் சொல்லக்கேளே. (383)

கேளப்பா யிந்நீரே தீநீரப்பா
கெடியாகப் படியரைபீங் கானில்விட்டுத்
தூளப்பா புகையூறல் சூரணித்துத்
துடியாகப் படியரைக்கால் போட்டுக்கிண்டி
ஆளப்பா கடிகைரெண்டு சென்றற்கேளு
ஆகாச வழலையென்ற பூநீராகு
வாளப்பா யெத்தனையோ வென்றெண்ணாதே
மாட்டதிலே படியரைக்கால் விளங்கத்தாவே. (384)

தூவினபின் அடிச்சுண்ணங் களஞ்சுபோடு
சுகமான ரத்தமதாந் தூரத்தோர்க்கு
மேவினபின் தெளிவுதனை யிறுத்துவாங்கி
வெய்யலிலே பட்சம்வைக்க உப்பாம்பாரு
பாவினதோர் கற்சுண்ண மூப்பாய்ச்செய்து
பாச்சப்பா சிவத்துக்குச் சீவனூச்சு
தேவிதனைச் சுத்தமே செய்தபின்பு
செப்புவேன் மறைப்பெல்லாஞ் செய்திகேளே. ()

கேளடா சாராயம் படிதானென்று
கெடியான பூவழலை படிகாலிட்டு
வாளடா சூடனுட னீருதன்னை
வகையாகக் களஞ்சியொன்று கூடப்போட்டு
தேளடா ரவிமுகத்திற் காய்ந்தால் உப்பாம்
சிவப்பான சத்தியுட நாதமைந்தா
கேளடா வாராமற் சொல்லக்கேளு
கூர்ந்துபார் கற்பூர வள்ளிச்சாறே. (386)

சாறுபடி யொன்றுக்குச் சூடன்கேளு
சாதகமாய் முப்பலந்தான் தாக்கியாட்டு
வேறுநிற மாய்மெழுகாம் வில்லைசெய்து
வெய்யலிலே மூன்றுநாள் காய்ந்தபின்பு
சாரணைஆ வரையிலையு மரைத்துருட்டித்
தடிக்கவே கவசமிட்டு வெயிலிற்போடு
தேருமடா மூன்றுநாட் காய்ந்தபின்பு
சிறப்பாக மேற்கவசம் வாங்கிப்போடே. (387)

வாங்கினபின் சுண்ணாம்பு மூவர்ப்பூவுந்தான்
வளமான சிறுநீராற் கவசம்பூசி
ஓங்கியதோ ரோலையுட கனமேபோதும்
உத்தமனே மூன்றுநாட் காய்ந்தபின்பு
தாங்குசிப்பிச் சுண்ணத்துள் ளெரித்துவாங்கு
தவளமாய்ச் சூடனது சுண்ணமாகும்
பாங்கான சத்திக்குச் சீவனாச்சு
பானுக்குப் பரனாகும் பருவங்காணே. (388)

காணவே யித்தனையுஞ் சொன்னீரையா
கல்லான சுண்ணாம்பி லுப்பங்கேது
பூணவே படிகம்போற் மின்போல்வெட்டும்
புகழவே அந்தக்கல் பார்த்தெடுத்து
தோணவே அதைச்சுட்டு யெடுத்துக்கொண்டு
சுத்தவெள்ளைக் கற்சுண்ணம் படியொன்றுக்கு
ஆணவே யெண்படி நீர் விட்டுநீத்தி
அப்பனே தேவிக்குப் பூசைபண்ணே. (389)

பூசைபண்ண மறந்தாக்கா லுப்பேருது
புகழாக யேறினுமே கண்கொள்ளாது
பூசைபண்ண மறந்தாக்காற் சாரம்போகும்
பூரணிக்கு மனதுவரத் தியானம்பண்ணு
பூசைபண்ணிக் குழிவெட்டி மூடிப்போடு
பொலிவான உப்பாகுந் துவாதசத்திற்
பூசைபண்ணி உப்பெடுத் திடுவாய்சொன்னேன்
புதைத்தநாள் முதலாய்ப்பெண் காற்றுகாதே. (390)

பெண்களுட காற்றங்கே வீசிற்றானற்
பேரான தேவிநின்று சிரிப்பாளப்பா
கண்களோ பலதுபடக் கண்களாகா
கடுங்குகைக்குட் காணுமற் புதைத்துப்போடு
நண்பாக இப்படியே செய்யானாகில்
நடுக்கேடா யில்லாட்டால் நோய்கள்மீறும்
கண்போகுஞ் செவிபோகுஞ் சாபமுன்னோர்
காட்டினா ரதுகண்டு வகைசொன்னேனே. (391)

வகையதுவுஞ் செய்யாட்டால் வடுகனங்கே
வாதமொன்றும் பலியாமல் மாட்டுவான்கேள்
திகையாதே பிறகிருந்து மனமேங்காதே
செப்பினதை மறந்துபோய் யெண்ணிடாதே
நகையாதே மசிநசியால் சாபந்தீர்த்து
நாட்டியே வடுகனுக்குப் பூசைபண்ணு
தகையாதே வேதாந்தம் நித்தம்பாரு
தாயங்கே வார்த்தைசொல்வாள் சிவன்சொல்வாரே.

சொல்லுமிந்தக் கற்சுண்ண முப்பாங்காலம்
துடியாக வடுகனங்கே நிர்த்தஞ்செய்வார்
செல்லுமிந்தத் தேவிமனங் கொள்ளுங்காலம்
சிவயோக சித்தனையு மறவாக்காலம்
சொல்லுமிந்த உப்பதற்கு விடமீதல்ல
கூறுகெட்ட சிந்தைதனைப் படைத்தாயானல்
வல்லதொரு வயிரவனார் கோபமாகி
வலதுசெய்வார் மாற்றானை வகுப்பார்காணே. (393)

காணப்பா யித்தனையுங் கற்சுண்ணத்தின்
கருத்தனையே தெருத்தோறும் போட்டபோர்க்கு
கோணப்பா குற்றமிகச் சமதியாகும்
கூறுகெட்ட மாடானாற் சொல்லக்கேளு
பேணப்பா அமுரியுப்புஞ் சுண்ணஉப்பும்
பேரான வழலையுப்பு மூன்றுங்கூட்டி
நாணப்பா வீரமுடன் புழுகுபூரம்
நற்குருவண் டரிசியோ டரைத்துக்கட்டே. (394)

கட்டியதோர் வில்லைதனை ரவியிற்போடு
காய்ந்தபின்பு சுண்ணத்தி லெரித்துவாங்கு
அட்டியென்ன அட்டமபூ ரணத்திலேறு
அனந்தரசாய்ச் சுழிமுனையில் நந்திமூழ்கப்
பட்டினாற் பலனுஞ்சூத் திரனேயானாற்
பலிக்குமடா வாதமொடு வாசியோகம்
விட்டகுறை பூரணத்தை உனக்காகத்தான்
வேதாந்த வாதத்தை வெளிவிட்டேனே. (395)

விட்டதோ ரெழுத்ததினால் ரேசகஞ்செய்
விடாதெழுத்தாற் பூரித்து மய்யமாக
கட்டதொரு யெட்டெழுத்தாற் கும்பித்தோர்க்குக்
கருணையினா லமுதமது கனிந்துபாயும்
தொட்டதொரு பாணமதை தேவிக்கென்று
சுழிமுனையி லேதீப சுடரையேற்றி
இட்டதொரு பூரணத்தை நோக்கிநோக்கி
யிருப்பவர்க்கு வாதசித்தி யின்னப்பாரே. (396)

இன்னமுந்தான் மக்கம்வந்த விபரங்கேளு
யென்னாசா னகத்தியரோடி ருக்கும்போது
சொன்னதொரு கயிலாச சட்டைநாதர்
சுந்தரம்போற் தீட்சையிரு நூறுசொல்லி
நன்னயமாய் ரிஷிகூட்டந் தன்னிலேதான்
நாதாந்த தீட்சையையுங் கொண்டுவந்து
மன்னவராந் திருமூல ரிடங்கொடுக்க
வாங்கியே பார்த்துவிட்டுக் கிழித்திட்டாரே. (397)

கிழித்ததொரு யேடதனைப் பொறுக்கிக்கட்டிக்
கிட்டப்போய்த் திருமூல ரிடத்தில்நின்று
சுழித்ததொரு நூலிதனை வைத்துநின்றேன்
சுகமாக ரிஷிகளெல்லா மொன்றுகூடி
பழித்திந்த நூலதனைக் கிழித்ததேது
பகர்ந்திடவும் வேணுமென்றெ னுசான்கேட்டார்
நெளித்தந்தத் திருமூலர் பதில்சொல்லாமற்
நேர்மையுட னிருந்துவிட்டார் நான்கேட்டேனே.

கேட்டதற்கு நீகேழ்க்க வேண்டாமென்றார்
கிருபைவைத்து யிருந்தோர்கள் பேசவில்லை
தாட்டிகமாய்க் குருமுனிவர் தடுத்துக்கேட்ட
ததற்கும்பே சாதிருந்தார் யானுங்கேட்டேன்
மேட்டிமை செய்யாதேநீ போபோவென்று
விறசினார் உடனேயான் மக்கம்வந்தேன்
கூட்டமாய் நபிமார்கள் யாகோப்பென்று
கூப்பிட்டுச் சுண்ணத்துச் செய்தார்பாரே. (399)

செய்துமே மக்கம்வந்த சேதிசொன்னீர்
திரளாக ரிஷிகூட்டஞ் சேறீரென்றீர்
உய்துமே திருமூலர் கிழித்தாரென்றீர்
உண்மையுடன் கேட்டதற்குக் கோபமாக
வைய்துமே போவென்று சொன்னாரென்றீர்
வைய்தயிட மின்னதென் றுஞ் சொல்லவில்லை
பையவே யிதன்விபரஞ் சொல்லவேண்டும்
பாரபரனே யெந்தனுக்குத் தெரியத்தானே. (400)

தெரியவே சொல்லுகிறேன் மைந்தாகேளு
செகத்திலே யெத்தனையோ மலைகளுண்டு
உரியதொரு மலைதோறுங் குகைகளுண்டு
உற்றதொரு மகாகோடி சித்தருண்டு
அறியவே அந்தந்த மலைமேல்வாசம்
அப்பனே செய்கிறார் வெகுபேரப்பா
பிரியமா யொருமலையில் முனிவர்சித்தர்
பேணியே யிருந்திடா ரின்னங்கேளே. (401)

இன்னமுந்தான் சொல்லுகிறேன் விபரமாக
இனிமையுடன் சதுரகிரி தன்னிலப்பா
தன்மையாய் முனிசித்தர் வெகுபேரப்பா
தனித்தனியே குகையினிலே யிருக்கிறார்கள்
நன்னயமாய் விசேடநாள் ளெல்லோருந்தான்
நலமாகச் சேருவர்கள் அன்றுன் தன்னில்
கன்னல்போல் கயிலாசர் யிருநூறைத்தான்
கையிலெடுத் தெல்லோர்க்குங் காட்டினாரே. (402)

எல்லோருஞ் சதுரகிரி தன்னிலப்பா
இனிமையுட னிருக்கிறதோர் விவரங்கேளு
வல்லதொரு சதுரகிரி தன்னிலேதான்
மகிமைமெத்தச் சஞ்சீவி மலேதா னுண்டு
நல்லதொரு பச்சிலேக ளனேகமுண்டு
நன்மையுடன் வசிப்பதற்குக் குகைகளுண்டு
மெல்லலவே கற்பமுண்ண இடந்தா னுண்டு
மேலான சித்தர்களும் வசிப்பார்பாரே. (403)

பாரப்பா திருமூலர் கிழித்தநூலே
பக்குவமாய்ப் பொறுக்கியதை யொன்றுசேர்த்து
நேரப்பா அநேகநூல் சொல்லிவிட்டேன்
நேர்மையுடன் கண்டறிந்தால் வெளியாய்த்தோணு
சீரப்பா யென்னூலேக் கோர்வையாகச் [ம்
செம்மையுடன் பார்த்தோர்க்குச் செயமேகிட்டும்
காரப்பா நபிமார்கள் பாதம்போற்று
கருத்தாக நாலூறு முற்றும்பாரே. (404)



யாகோபு

## வைத்திய வாத சூஸ்திரம் 400.

முற்றிற்று



## யாகோபு வாத சூஸ்திரம் 400 க்கு பொருளடக்க

# அட்டவணை.

அட்டவணை முற்றிற்று.